

# இன்பகரமான பிரயாணத்திற்கு...



## பி என் பி
## டிராவலர் செக்குகள்

பயணத்தின்போது பி என் பி டிராவலர் செக்குகளை உடன் கொண்டு செல்லுங்கள். ஆபத்தில்லை, கவலையில்லை, நிம்மதியாய்ப் பயணம் செய்யுங்கள். டிராவலர் செக்குகள் தொலைந்து விட்டாலும் அதற்கு பதில் வேறு பெற்றுக் கொள்ளலாம். பல்வேறு தொகைகளுக்குக் கிடைக்கும்.

பி என் பி டிராவலர் செக்குகளுக்குக் கமிஷன் கிடையாது.

**பஞ்சாப் நேஷனல் பாங்க்**

PR-PNB-4716-TAH-1

# தீபாவளிக்கு விசேஷ தள்ளுபடி

# 10%

## 18-10-67 முதல் 1-11-67 வரை

## கோ-ஆப்டெக்ஸ்

## கைத்தறித்துணி விற்பனையில்...

இந்த் தள்ளுபடி எல்லா ''கோ-ஆப்டெக்ஸ்''
விற்பனை நிலையங்களிலும், பிரதம நெசவாளர்
கூட்டுறவு சங்கங்களிலும் கிடைக்கும்.

**தமிழ்நாடு கைத்தறி நெசவாளர்
கூட்டுறவு சங்கம் லிமிடெட்**
'பாலசுந்தரம் கட்டிடம்' எழும்பூர், சென்னை-8





ELEGANT

இந்தத் தள்ளுபடி மேற்கு வங்காளம், பீஹார், ஒரிஸா, மைசூர், கேரள
மாநிலங்கள் தவிர இதர எல்லா கோ-ஆப் டெக்ஸ் விற்பனை நிலையங்களிலும்
பிரதம நெசவாளர் கூட்டுறவு சங்கங்களிலும் கிடைக்கும்.



# கல்கி




"என்ன சார், நம் மானேஜர் 'வள்'ளென்று விழுகிறார்?"

"வேறு ஒன்றுமில்லை, பெயின்டர் அவருடைய பெயரை எல். சேஷன் என்பதற்குப் பதிலாக 'அல் சேஷன்' என்று எழுதிவிட்டானாம், அது தான்!"

— டி. என். பத்மநாபன்

## பொருளடக்கம்

பிலவங்க, ஐப்பசி 5 - அக்டோபர் 22


| | | |
|---|---|---|
| மேகம் விலக வேண்டும்! | — | 5 |
| ராஜாஜியின் கருத்துக்கள் | — | 8 |
| என்ன சேதி? | — | 13 |
| யாரோ இவர் யாரோ? | — | 17 |
| விண்வெளியில் பண் தந்தவர் | — | 25 |
| ஆத்ம தாகம் | — | 26 |
| கல்லுக்குள் ஈரம் | — | 34 |
| குட்டிக் கதைகள் | — | 42 |
| மணக்கோலம் | — | 45 |
| நெஞ்சக் கிளர்ச்சி | — | 55 |
| பல்கலைப் பக்கம் | — | 68 |
| வைர மணம் | — | 70 |
| படித்துப் பாருங்கள் | — | 79 |
| வட்டமேஜை | — | 80 |






திருச்சி, பாரத் ஹெவி எலக்டிரிகல்ஸ் லிமிடெட், ஜெனரல் மானேஜர் ஸ்ரீ ஆர். எஸ். கிருஷ்ணன் அவர்கள் குமாரத்தி சௌ. ரோகிணி B. Sc.க்கும், திருச்சி ராவ்பகதூர் ஸி. வி. கிருஷ்ணஸ்வாமி அய்யர் அவர்கள் குமாரர் சிரஞ்சீவி ஜம்புநாதன், B. Sc., M. Tech., M. S. (Tex)க்கும், திருவெறும்பூர் B.H.E.L. டவுன்ஷிப்பில் சமீபத்தில் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்கும் அன்று மாலை நடைபெற்ற வரவேற்புக்கும் நகரப் பிரமுகர்களும் உறவினர்களும், நண்பர்களும் வருகை தந்து மணமக்களை வாழ்த்தினர்.

வாழ்க, மணமக்கள்!

இந்திய சர்க்காரின் கடன்கள்

எவரெஸ்ட்








தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 27 □ இதழ் 12

# மேகம் விலக வேண்டும்!

ஆண்டவன் அருளால் இவ்வாண்டு மேகம் நன்கு பொழிந்து நாடு முழுவதிலும் விளைச்சல் பெருகியுள்ளது. பல இடங்களில் வெள்ளக் கஷ்டம் ஏற்பட்ட போதிலும், மொத்தத்தில் நாட்டின் உணவு உற்பத்தி திருப்திகரமாகவே இருக்கும் என்று மத்திய உணவு மந்திரி கூறியுள்ளார். இயற்கை நமக்குச் சாதகமாயிருந்துவிட்டது. மனித இயற்கையின் விதிகளுக்குச் சாதகமாக ஆட்சியாளரும் கொள்கைகளை அமைத்துக் கொண்டு உற்பத்தியாளருக்கு ஊக்கம் அளித்தால் இன்னும் எத்துணையோ சிறப்பான பயனைப் பெறலாம்.

தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில் குறுவை தானிய விளைச்சல் அமோகமாக இருந்திருக்கிறது. இதில் நாம் பூரண நிறைவு பெற முடியாதபடி தஞ்சை மாவட்டத்தில் சில அசம்பாவிதங்கள் நிகழ்ந்துவிட்டன. வானத்தில் மேகம் குழுமுவது விவசாயத்துக்கு நல்லது. ஆனால் நிலச் சொந்தக்காரர்களுக்கும் உழவுத் தொழிலாளிகளுக்குமிடையே பரஸ்பரம் சந்தேகம் என்ற மேகம் பரவ ஆரம்பித்தால் விளைச்சலே பாழாக வேண்டியதுதான். துரதிருஷ்டவசமாகத் தஞ்சை மாவட்டத்தில் — குறிப்பாக நாகப்பட்டினம், மன்னார்குடி பகுதிகளில் — உழவுத் தொழிலாளிகளின் மனத்தில் பேத விதையையும் சந்தேக நாற்றுக்களையும் நடுவதில் தோழர்கள் வெகு மும்முரமாக இருந்து வருகிறார்கள். இரு வர்க்கத்தினரிடையே ஐயம் இருக்கலாம், நேயக் குலைவு ஏற்படலாம் — ஆனால் இதுகாரணமாகத் தங்கள் வயிற்றிலும் தாய்த்திரு நாட்டின் வயிற்றிலும் அடிப்பது போல் அறுவடைக்கே குந்தகம் செய்ய நினைப்பது மிகமிக விசனகரமானது.

மன்னார்குடியில் உழவுத் தொழிலாளருக்கும் உரிமையாளருக்கும் ஏற்பட்ட சர்ச்சையில் போலீஸாரின் துப்பாக்கிப் பிரயோகத்துக்கு அவசியம் ஏற்பட்டு, அதனால் ஓர் இன்னுயிர் பறிக்கப்பட்டது வருத்தத்துக்குரியது எனில், இந்தச் சச்சரவை அறுவடைத் தருணம் பார்த்து உச்ச கட்டத்துக்குக் கொண்டு வந்த தோழர்களின் திருவிளையாடல் அதனினும் வருத்தத்துக்குரியது. ஆலைகளில் வேலைநிறுத்தம் செய்து, அதன் மூலம் விவகாரத்தைத் தீர்த்துக் கொண்டு பிற்பாடு உற்பத்தியை ஈடுகட்ட அதிக ஷிப்டுகள் உழைப்பது சாத்தியமாயிருக்கலாம். ஆனால் பூமாதேவியின் ஆலயான வயலின் தன்மை இப்படிப்பட்டதல்ல. இன்று செய்ய வேண்டிய உழவை, இன்று செய்ய வேண்டிய நடவை, இன்று செய்ய வேண்டிய அறுப்பை இன்றே செய்தாக வேண்டியது அதன் தேவை. இங்கு வேலைநிறுத்தம் செய்து, கால விரயம் செய்து உற்பத்தியாளரை அடிபணிய வைக்கலாம் என்று எண்ணுவது தருமத்துக்கு உகந்த காரியமல்ல.

உரிமையாளருக்கும் தொழிலாளருக்குமிடையே ஏற்படும் பிணக்குகளைத் தீர்க்க மத்தியஸ்த நிறுவனங்களும், விசாரணை அமைப்புக்களும் உள்ளன. அவற்றிடம் தகராறுகளைத் தாக்கல் செய்து அவற்றின் தீர்ப்பை ஏற்பது தான் முறையேயன்றி அவரவரும் தமக்குத் தோன்றுகிறபடி சட்டத்தைத் தாங்களே பிரயோகிப்பது முறையல்ல. எல்லாத் தொழில்களுக்கும் இது பொருந்தும் எனில் விவசாயத்துக்கு விசேஷமாகப் பொருந்தும். இதையெல்லாம் உணராதவர்களல்ல நம் மக்கள். எனினும் தோழர்களின் பிரசார வீச்சுக்கு அவர்களில் சிலர் ஆளாகியிருக்கிறார்கள்.

தேர்தல் கூட்டணியில் கம்யூனிஸ்ட்களுக்கு இடம் தந்தது பற்றிப் பலரும் அப்போதே வருந்தினர். ராஜாஜியும் தமது சுதந்திரக் கட்சி நேரடியாகக் கம்யூனிஸ்ட்களுடன் ஒருவிதத் தொடர்பும் கொள்ளாது என்று உறுதி செய்தார். ஆனால் துரதிருஷ்டவசமாகக் கூட்டணியில் கம்யூனிஸ்ட்களும் இடம் பெற்றதால், முன்பு சட்டசபையில் இரண்டே ஸ்தானம் பெற்றிருந்த அக்கட்சியினர் இம்முறை பதின்மூன்று

ஸ்தானங்களைக் கைப்பறறினர். இதில் பதினொருவர் இடதுசாரியினர். தஞ்சைக் கல வரப் பகுதிகளில் கையோங்கி இருப்பவர் களும் இடதுசாரி கம்யூனிஸ்டகளே. நாட்டின் நெற்களஞ்சியமான தஞ்சையில் அவர்கள் 1952ல் பெற்றிருந்த பலத்தை அடியோடு குறைத்த ராஜாஜி தஞ்சையின் வாழ்வையே வளமிக்கதாகச் செய்தார். அது பொய்த்து விடப் போகிறதே என்று சென்ற வாரம் கலங்கும் படியாயிற்று. நல்ல வேளையாகத் தமிழக அரசின் விவேகமான தலையீட்டினால் மேகம் தற்போது விலகி, அறுவடை மேற்கொள்ளப் பட்டிருக்கிறது. ஆனால் விலகிய மேகம் மீண்டும் எப்போது வந்து மூடுமோ என்ற பீதி தஞ்சைப் பகுதிகளில் அகலவில்லை. விவசாயிகளிடை ஏற்பட்டுள்ள நிச்சயமின்மையைக் களைவதே இப்போது அரசாங்கத்தின் முக்கியமான பணி.

இடதுசாரி கம்யூனிஸ்ட்களுடன் தேர்தலின் போது கூட்டணி சேர்ந்த போதிலும் இப்போது தி. மு. க. ஆட்சியாளர்கள் அவர்களது தந்திர ஜாலங்களைப் புரிந்துக் கொண்டுள்ளனர். புரிந்துக் கொண்டதோடு அதைப் பகிரங்கமாக வெளிப்படுத்தியுள்ளனர். 'கம்யூனிஸ்ட்கள் ஐயுறவாக விளையாடி வருகின்றனர். கம்யூனிஸ்ட் நில உரிமையாளர் தாம் குறைவாகக் கூலிகளை கொடுத்த போதிலும், மற்ற உடைமையாளருக்கு எதிராக உழவுத் தொழிலாளரைத் தூண்டி விடுகிறார். கம்யூனிஸ்ட் 'தலைவர்' வார்த்தைகளைக் கேட்டுத்தான் தொழிலாளர் காலம் தாழ்த்தி வேலைக்கு வருகின்றனர்' என்றெல்லாம் விவசாய மந்திரி திரு கோவிந்தசாமி கூறியுள்ளார். இந்த உணர்வு நிலப்பிரச்னைகளைத் தீர்ப்பதில் தி. மு. க வுக்குப் பெரிதும் கைகொடுக்கும்.

'எது எப்படியாயினும் அறுவடை வேலைகள் பாதிக்கப்படலாகாது' என்பதில் திரு அண்ணாதுரை அவர்கள் காட்டிய ஈடுபாட்டை நாடு போற்றுகிறது. இந்த ஓர் அறுவடை மட்டுமின்றி இனி வரும் அறுவடைகளும் கம்யூனிஸ்ட் சூழ்ச்சிக்காரர்களின் மயக்குத் தந்திரங்களுக்கு ஆளாகாதிருக்கத் திரு அண்ணாதுரை முனைந்து முயல்வாராக!

## காமகோடியின் கருணைமொழி

மிருகங்களுக்குக் கொடுத்திருக்கும் சௌகரியங்களை ஸ்வாமி நமக்குக் கொடுக்கவில்லை என்று தோன்றும். தற்காப்புக்காக மாட்டுக்குக் கொம்பும், புலிக்கு நீண்ட நகமும் தந்திருப்பது போல் நமக்கு ஸ்வாமி எந்த இயற்கையான ஆயுதமும் தரவில்லை. குளிரிலிருந்து காப்பாற்றிக் கொள்ள ஆட்டுக்கும் மற்றும் பல மிருகங்களுக்கும் உடம்பிலேயே போர்வை வைத்திருக்கிறார். மனிதன் ஒருவனைத்தான் வழித்து விட்டிருக்கிறார். ஆபத்து வந்தால் காத்துக் கொள்ள உடம்போடு ஆயுதமில்லை. ஓடிவிடலாமா என்றால் ஓடுவதற்கும் குதிரை போல் சக்தி நமக்கில்லை.

இப்படியெல்லாம் செய்ததற்கு ஈடாகத்தான் ஸ்வாமி இவனுக்குப் புத்தியை அதிகமாக வைத்திருக்கிறார். குளிரானால் மற்ற பிராணியின் போர்வையை இவன் எடுத்து நெய்து கொள்கிறான். வேகமாகப் போகவேண்டுமானால் குதிரையை வண்டியிலே கட்டி அதன் வேகத்தை இவன் உபயோகித்துக் கொள்கிறான். மற்றவற்றிடம் உள்ளவை இவனிடத்தில் இல்லாவிட்டாலும் அவற்றை எல்லாம் உபயோகித்துக் கொள்ளும் புத்தி சக்தியை இவனிடம் வைத்திருக்கிறார்.



மனிதனைத் தவிர மிருகங்கள் எல்லாம் குறுக்கே வளர்ந்திருக்கின்றன. மனிதன் ஒருவன்தான் நெடுக வளர்ந்திருக்கிறான். குறுக்கே வளருவதை விட்டு மேலே பார்க்க வேண்டும் என்று ஸ்வாமி மனிதனை வைத்திருக்கிறார்.

உயர்ந்து மேல் நோக்கி வளருகிற மனிதன் மற்றப் பிராணிகளை விட அதிகமான சுகத்தை அநுபவிக்கலாம். ஆனால் வாஸ்தவத்தில் நாம் துக்கத்தையே அதிகம் அநுபவிக்கிறோம். மிருகங்களுக்கு நம்மளவு காமமும் கவலையும் அவமானமும் இல்லை. நாம்தான் பாபங்கள் செய்து துக்கத்தை அநுபவிக்கிறோம்.

இதற்கெல்லாம் காரணம் வேறெந்த ஜீவராசிக்கும் இல்லாத அடங்கா ஆசை மனிதனுக்கு இருப்பதுதான்.

ஆசைக்குக் காரணம் என்ன? நம்மைத் தவிர இன்னொன்று இருப்பதாக எண்ணுவதால்தான் அதனிடம் ஆசை உண்டாகிறது. இரண்டு இருப்பதாக எண்ணுவது போய் ஒன்றாய்க் காணும் ஞானம் வந்தால் ஆசையில்லை; கோபமில்லை; பாபமில்லை; ஜனனமில்லை. நம்மைப் பெற்ற அம்மா உடம்புக்குப் பால் கொடுப்பாள். அறிவுக்கு ஞானப் பால் கொடுப்பவள் அம்பாள்தான். ஆசை அழிய அவளது சரணாரவிந்தத்தைப் பற்றிக்கொண்டு அவளோடு நம்மைக் கரைத்துக் கொள்ள வேண்டும்.

# ஆட்லி அமரரானார்!

விரட்டுக் கொள்கையாளராக இன்றி மனிதாபிமானம் மிக்க சோஷலிஸ்டாக வாழ்ந்த ஆட்லி அவர்களின் மறைவைக் குறித்து உலகமே கண்ணீர் பெருக்குகிறது.

இரண்டாவது உலக யுத்தம் முடிந்து, பிரிட்டிஷ் தொழிற் கட்சி பதவிக்கு வந்ததும், பிரதமர் ஆட்லிதான் இந்திய சுதந்திரத்துக்கு வழி வகுத்து நிறைவேற்றி வைத்தார். இந்திய மக்கள் என்றும் இந் நன்றி மறக்க மாட்டார்கள்.



இந்தியா மட்டுமின்றி அவர் காலத்தில்தான் பர்மா, இலங்கை முதலிய நாடுகளும் பிரிட்டிஷ் ஆளுகையிலிருந்து சுதந்திரம் பெற்றன. 'சூரியன் அஸ்தமிக்காதது பிரிட்டிஷ் சாம்ராஜ்யம்' என்றும் 'பிரிட்டிஷ் மன்னரின் ஆட்சி எல்லையைக் குறைக்க நாங்கள் இல்லை' என்றும் பிடிவாதம் பேசிய பிரதமர்களிடை இப்படியொருவர் தோன்றியது அதிசயம்.

சாம்ராஜ்யத்தைச் சிறிய தாக்கினால் தாய் நாட்டின் ஆதரவை இழப்போமோ என்று அவர் விசாரப்படவில்லை. அவரது நியாய உணர்வும், பிறரது சுதந்திர வேட்கையை மதிக்கும் பாங்கும் அவ்வளவு உயர்ந்தவை.

இரண்டாம் யுத்தத்தின் சோதனைக் காலத்தில் கன்ஸர்வேடிவ் கட்சியைச் சேர்ந்த பிரதமர் சர்ச்சில் தமக்கு உறுதுணையாகத் தேடிக் கொண்டவர் எதிர்க் கட்சியிலிருந்த ஆட்லியைத்தான். பண்பும் பரிவும் கொண்ட ஒரு பெரியாரை அவரது பிரிவில் இழந்தோம்.

# வீரர் மறைந்தார்!

"நான் விரும்புகிற அரசாங்கம் அமையாமல், நாளைக்கோ அல்லது பத்தாண்டுகளுக்குப் பின்போ நான் மாண்டு போனாலும், இது விதி விட்ட வழி என்று விலகியிருக்கக் கற்று விட்டேன்" என்று மூன்றரை மாதங்களுக்கு முன் கல்கியில் எழுதிய டாக்டர் ராம் மனோகர் லோஹியா அவர்கள் தாம் விரும்பிய அரசாங்கத்தைக் காணாமலே மறைந்து விட்டார். "விலகியிருக்கக் கற்றுவிட்டேன்" என்று அவர் எழுதினாலும் இறைவன் அவரை அப்படியிருக்க விட்டுவிடவில்லை. மரணத் தறுவாயில்கூட பிரக்ஞை வரும்போதெல்லாம் 'நிலவரி வஜாக் கிளர்ச்சி' முதலிய அரசியல் திட்டங்களையே பேசிக் கொண்டிருந்தார். உண்மையான தேச பக்தியின் ஆவேசம் அது.



லோஹியா அவர்களது கொள்கையிலிருந்து ஒருவர் மாறுபடலாம். அவரது தீவிரவாதம், உக்கிரமான செயல் திட்டம் ஆகியவற்றிலிருந்து மாறுபடலாம். ஆயினும் அவரது அந்தரங்கமான நாட்டுப் பற்றை யாரும் மறுக்க முடியாது. அரசியலில் கலந்துவிட்ட கீழ்த்தரமான உபாயங்களை அவர் ஒருபோதும் கைக்கொண்டதில்லை. சொந்த முன்னேற்றத்துக்காக அரசியல் சகடையை உருட்டும் தந்திரத்தை லவலேசமும் அறியாதவரவர். அவரது ஆன்ம பரிசுத்தத் தினாலேயே மாற்றாருக்கும் அவரிடம் மதிப்பு இருந்தது. அவரது எதிர்ப்புத் திட்டங்களில் வன்முறை அம்சங்களிருப்பதாக சிலரு கருதினாலும், உண்மையில் தாம் அஹிம்சை மார்க்கத்திலேயே பற்று வைத்திருப்பதாக அவர் சொல்லிக் கொண்டார். அஹிம்சா மார்க்கத்திலேயே மக்களைப் புரட்சிக்கு ஊக்குவது எப்படி என்பது குறித்தே கடைசிக் காலத்தில் சிந்தித்தபடியிருந்தார். 'மக்களைச் செயலில் ஈடுபடுத்துகிற உபாயம் கைக்கு அகப்படாமல் நழுவிக்கொண்டேயிருக்கிறது. இவ்வாறு பொதுஜனத்தை இயக்குவது எப்படி என்பது பற்றி ராஜாஜி புதிதாகச் சிந்தனை புரிய வேண்டும்' என்று இப் பத்திரிகையில் எழுதினார். இவ்விரு தலைவர்களும் நெருங்கி வருவதால் தேசத்துக்குப் பல நன்மைகள் விளையும் என்று ஆவலோடு எதிர்பார்த்திருந்தோம். விதி விளையாடி விட்டது!




இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்கும் சாஸனத்தில் கையெழுத்திட்ட பிரிட்டிஷ் பிரதமர் ஆட்லி அவர்கள், சமீப காலத்தில் இங்கிலாந்தில் தோன்றிய பெருமக்களில் ஒருவர் அவர். மாசுமறுவின்றி நல்லவராக விளங்கினார். கூர்ந்த மதி பெற்றிருந்தார். ''நேரு அவர்கள் அதிகாரம் என்றால் என்ன என்பதை நன்கு புரிந்து கொண்டிருந்தார். கவிதையையும் இதே போல் புரிந்து கொண்டிருந்தார். ஆனால் இவற்றில் எது எங்கே முடிகிறது, மற்றது எங்கே தொடங்குகிறது என்பதைத்தான் அவர் புரிந்து கொள்ளவில்லை'' என்று நேரு அவர்களின் மறைவுபோது ஆட்லி கூறியது அவரது ஆழ்ந்த திருஷ்டியைக் காட்டுகிறது. இது நேருவைப் பற்றி மட்டுமின்றி ஆட்லியின் இயல்புகளையும் குறிப்பால் உணர்த்துகிறது. பிரிட்டனின் உத்தமப் பிரஜைகளில் ஒருவர் மறைந்த இச்சமயத்தில் மரியாதையும் நன்றியும் பாராட்டுதலும் கலந்த என் இதயபூர்வமான அநுதாபத்தைத் தெரிவிக்கிறேன்.

ஃஃஃ

ராம மனோஹர லோஹியாவைக் குறித்த கவலை முடிந்துவிட்டது. என் நம்பிக்கையும் பிரார்த்தனையும் வீணாயின. அவரது உயிரைக் காக்கச் சர்க்கார் எடுத்த பெரும் முயற்சிகளும் வியர்த்தமாயின. நம்முடைய அரசியல் வாழ்வில் சொற்பமாகவே காணக்கூடிய நேர்மை வாய்ந்த, செயல் துடிப்புள்ள தலைவர்களில் ஒருவரை இழந்து விட்டோம். உழைக்காமலே பலன் பெற விரும்பும் மக்களின் செயலின்மையைக் கண்டு அருவருத்தவர் லோஹியா. நிகழ்கால விவகாரங்களைக் கண்டு மக்கள் ஆத்திரப் படவில்லையே என்று அவர் ஆத்திரப்பட்டார். அவரது மறைவில் வருந்தும் ஆயிரக்கணக்கானவர்களின் அஞ்சலியில் என்னுடையதும் கலக்கிறது.

ஃஃஃ

இந்தியாவிலேயே சில பகுதிகளில் உபரி விளைச்சல் இருந்தும் வேறு சில பகுதிகளில் பஞ்சம் இருக்கும் நிலையைச் சகித்துக் கொள்வது அசாத்தியம். மொழிவாரிப்பிரிவினையால் 'பிரதேச பக்திக்கு' வலுத்தந்து விட்டது உண்மையேயாயினும், இந்த அமைப்புக்குள்ளும் இந்தியா ஒன்று என்ற உணர்ச்சியை உண்டாக்க ஒரு திட்டம் வகுத்தாக வேண்டும். பருவமழை எந்தப் பகுதியிலுமே ஆண்டுதோறும் ஒரே போலிருப்பதில்லை. எனவே ஒரு பருவத்தில் நல்ல விளைச்சல் காண்கிற ராஜ்யம் அதில் ஒரு பகுதியைப் பஞ்சப் பகுதிக்கு அனுப்பும்போது அதற்கு மத்திய சர்க்காரில் கணக்கு வைத்துக் கொள்ளலாம். இதே பகுதியில் உணவுக் கஷ்டம் ஏற்படும்போது இந்தக் கணக்குக்குச் சரியாக இந்த ராஜ்யத்துக்குப் பிறவற்றிலிருந்து தானியம் வழங்கலாம். அதே உணவுத் தானியமாகத் தான் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்பதில்லை. அதற்கு ஈடாக வேறு எது தேவையோ அதைத் தரலாம். மொழிவாரி ராஜ்யங்களையும், அதன் அடிப்படையில் எழுந்துள்ள சுயநலக்கூட்டங்களையும் நாம் ஒத்துக் கொண்டாலும் கூட, ராஜ்யங்களுக்கிடையே உதவி நிலவுவதற்காக, இப்படி ஒரு பாங்குக் கணக்கு வைத்துக் கொள்ள வேண்டும் என்பதே என் யோசனையின் கரு. உதவி செய்யும் ராஜ்யம் விரும்பக்கூடிய வகையில் இதைச் செய்ய வேண்டும்.

ஃஃஃ

'ஹிந்து' பத்திரிகையில் பம்பாயைச் சேர்ந்த மாதவதாஸ் நலபட் எழுதுகிறார்: 'சத்தீஸ் கார்ஹி பேசுகிற மத்தியப் பிரதேச வாசிக்கு போஜ்புரி பேசுகிற உத்திரப் பிரதேசவாசியின் மொழி புரிவதில்லை. ஆயினும் இருவர் பேசுவதும் ஹிந்தி தான்! வட இந்தியர் பேசும் பல பகுதி மொழிகளை ஒரு மொத்தையாக்கி அதை ஹிந்தி என்பது குதர்க்கம். இது தென் இந்திய மொழிகளையெல்லாம் தமிழ் என்று சொல்வது போன்றது.'

ஹிந்தி என்ற பெயரில் எதைச் சொன்னாலும் சரி, அது நாட்டில் ஒரு பெரும் பகுதிக்கு அந்நியமொழியே என்பதை மறப்பதற்கில்லை.

ஃஃஃ

மாணவர்கள் அரசியலில் பங்கு கொள்ளக் கூடாது என்று இவ்வளவு காலமாகச் சொல்லி வந்தோம். இப்போது மாணவருக்குரிய கல்வியில் அரசியல்வாதிகள் தலையிடக் கூடாது என்று திருப்பிச் சொல்லும்படியிருக்கிறது. 'இதுதான் போதனை மொழி' என்று அரசியல்வாதிகள் ஒரு மொழியைத் திணிப்பது அநுமதிக்கத்தகாத தலையீடேயாகும். ஆங்கிலம் விரும்பும் மாணவர்களையும் பேராசிரியர்களையும் புறக்கணித்து ஆங்காங்கு பிரதேச மொழியைப் புகுத்துவது உயிராபத்தான தவறு. இதனிடையில் ஹிந்திக்கு அவகாசம் தந்து, அதற்காக இன்றிலிருந்தே பூர்வாங்க நடவடிக்கை மேற்கொள்ளுவது அதனினும் பெரும் தவறுதலாகும்.

ஃஃஃ

பம்பாயில் வசிக்கும் தென்னிந்தியரின் எண்ணிக்கை மூன்று லட்சம். மற்ற மாநிலங்களில் வசிக்கும் மராட்டியரின் எண்ணிக்கையோ ஐம்பது லட்சத்துக்கும் அதிகம். ராஜ்யவாரி புள்ளி விவரம் வருமாறு: உ. பி: 14 லட்சம்; தமிழகம்: 7 லட்சம்; ஆந்திரா

நாலரை லட்சம்; மைசூர்: ஆறு லட்சம்; மே. வங்கம்: 60,000; அஸ்ஸாம்: 10,000; ஒரிஸ்ஸா: லட்சம்; ம. பி. 13 லட்சம்; கேரளம்: 8,000; குஜராத்: 5 லட்சம்; ராஜஸ்தான்: 30,000.

இது 'கரெண்ட்' தருகிற தகவல்.

ஃஃஃ

பணத்தில் உள்ள வறுமையை அகற்ற வேண்டியது தான். ஆனால் அகற்றப்பட வேண்டிய வேறு வறுமைகளும் உண்டு. தருமக் கோட்பாடுகளில் வறுமை, நன்னடத்தையில் வறுமை, சிந்தனை வறுமை, அபிலாஷை வறுமை, தைரியத்தில் வறுமை, திட சங்கற்பத்தில் வறுமை, இவற்றை 'ஃப்ரீமன்' பத்திரிகையில் ஒரு மிஸௌரிப் பெண்மணி சுட்டிக் காட்டுகிறார். இந்தியா எழுச்சி பெற வேண்டுமானால் இந்தப் பட்டியலைக் கவனத்துடன் பார்க்க வேண்டும். சக்கிலி மகனான ஹான்ஸ் கிறிஸ்டியன் ஆண்டர்ஸனும், அடுப்பு வெளிச்சத்தில் படித்த ஆபிரஹாம் லிங்கனும் பண வறுமையிலும் மற்ற வறுமைகளில்லாததால் முன்னுக்கு வந்ததை அவர் உதாரணம் காட்டுகிறார். 'வறுமையைப் போக்கிக் கல்வி பெருக்குவது நல்ல காரியம் தான். ஆயினும் கடவுள் கொடுத்த ஆற்றல்களை வறுமையாலும் தடுத்து நிறுத்த முடியாது' என்கிறார் அவர்.

ஃஃஃ

'மதம் என்பது நன்னெறி மட்டுமல்ல; அதோடு உணர்ச்சியும் கலந்தாலே மதமாகும்' என்றார் மாத்யூ ஆர்னல்ட். பள்ளியில் மத போதனை வேண்டுமென்பவர் இதைக் கவனிக்க. உணர்ச்சியே நன்னெறிப் போதனைக்கு உயிரூட்டித் தெய்வீகமாக்கும். இல்லாவிடில் அதுவும் அல்ஜிப்ராப் பாடம்தான். புத்த மதம் கடவுள் இல்லாத வெறும் நன்னெறியைச் சொல்வது என்று நினைத்தே அதனைச் சில அரசியல்வாதிகள் போற்றுகின்றனர். இது உண்மையானால் அது இந்தியாவுக்கோ ஆசியாவுக்கோ பயன்பட்டிராது. புத்தரைச் சுற்றி ஏற்பட்டுள்ள உணர்ச்சிதான் பௌத்தத்தை உண்மை மதமாக்கியுள்ளது. மதச் சார்பற்ற பேராசிரியர் எழுதிய பாடப்புத்தகத்தில் இந்த உணர்ச்சியைப் பெற முடியாது. நன்னடத்தையை உண்டாக்காமலே இப் புத்தகங்களில் மாணவர் 'டி பிளஸ்' பெறச் செய்யலாம். ஆனால் உண்மை மதபோதனை நன் மக்களை உண்டாக்குவது தான்.

---

## வெற்றி பெற வாழ்த்து!

தென் சென்னை மக்கள் சபைத் தேர்தலில் தி. மு. க. வேட்பாளராகத் திரு மாறன் அவர்களை நிறுத்தி வைப்பது குறித்து மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். மிக உயர்ந்த பண்பாடு உடையவர் திரு மாறன். எல்லாவிதத்திலும் அவர் வெகு சிறந்த வேட்பாளராவார். அவர் தேர்தலில் வெற்றி பெற்றால் — பெறுவார் என்பதில் சந்தேகமில்லை — மக்கள் சபையில் நல்ல ஓர் அங்கத்தினராக விளங்குவார். சென்னை சர்வகலாசாலையில் பொருளாதாரத்தில் எம். ஏ. பட்டம் பெற்றவர் அவர். திரு மாறன் வெற்றி பெறுவதற்காகச் சுதந்திரக் கட்சித் தொண்டர்கள் யாவரும் இதயபூர்வமாக உழைப்பார்களென நம்புகிறேன். அரசியல் அந்தஸ்தில் மிகவும் தாழ்ந்துவிட்ட காங்கிரஸ் தனது ஒழுங்கீனத்தையும் அவமானத்தையும் மீறித் தலைதூக்க முயல்கிறது. அதற்குப் பூரணதோல்வி கொடுக்க வேண்டும். காங்கிரசுக்கு எதிராக முன்பு கொடுத்த தீர்ப்பைத் தென் சென்னை மீண்டும் உறுதி செய்ய வேண்டும். — ராஜாஜி



திரு மாறன் அவர்களின் வேட்பைத் தலைவர் ராஜாஜி முன்மொழிகிறார்.

# பயன் நிறைந்த விஜயம்

இந்தியப் பிரதம மந்திரி ஸ்ரீமதி இந்திரா காந்தி இலங்கைக்கு விஜயம் செய்துவிட்டுப் போனதிலிருந்து நாட்டு மக்கள் அனைவரிடத்திலும் நல்ல எண்ணமும் நம்பிக்கையும் ஏற்பட்டுள்ளன. நேருஜி உள்ளிட்டு எத்தனையோ ராஜதந்திரிகளும் அரசியல்வாதிகளும் இலக்கியமேதைகளும் கலைஞர்களும் இலங்கைக்கு வந்து போயிருக்கிறார்கள். அவர்கள் எல்லோருடைய வருகையையும் மிஞ்சிவிட்டது ஸ்ரீமதி இந்திராகாந்தியின் விஜயத்தினால் உருவாகியிருக்கும் பரஸ்பர நல்லெண்ணமும் நம்பிக்கையும் என்பது இங்கு நிலவும் பொதுவான அபிப்பிராயம்.

ஸ்ரீமதி இந்திரா இங்கு வந்த நேரமும் காலமும் மிக மிகப் பொருத்தமானது. டில்லியில் இலங்கையின் முன்னாள் பிரதம மந்திரி ஸ்ரீமதி பண்டாரநாயகாவுக்கும் காலஞ்சென்ற இந்தியப் பிரதம மந்திரி திரு லால் பஹாதூர் சாஸ்திரிக்குமிடையில் ஏற்பட்ட ஒப்பந்தத்தைச் செயல்படுத்த தேசிய அரசாங்கம் மசோதாவைச் சட்டமாக்கியவுடன் இந்தியாவின் நல்லெண்ணத்தையும் நாணயத்தையும் பாதிக்கும் முறையில் பிரசாரங்கள் நடந்தன. இச்சூழ்நிலையில் இலங்கைக்கு வந்த ஸ்ரீமதி இந்திரா காந்தி, இலங்கையிலிருந்து இந்தியாவுக்குத் திரும்பக்கூடிய நாடற்ற மக்களுக்கு, "இந்தியாவுக்கு வர விரும்புவோர்களெல்லாம் தாராளமாக வாருங்கள். உங்களுக்குப் புது வாழ்வு அங்கே காத்திருக்கிறது" என்று பகிரங்கமாக ஓர் அழைப்பும் விடுத்தது துஷ்ப் பிரசாரம் செய்து வந்தவர்களின் வாயை அடைத்து விட்டது. இது ஏமாற்றுப் பேச்சு அல்ல என்பதைத் திட்டவட்டமாக அறிவிக்க இந்தியா திரும்புவோர்களுக்கான புனர்வாழ்வுத் திட்டங்களையும் இங்குள்ள இந்திய ஹைகமிஷன் மூலமாக வெளியிட்டிருக்கிறார்.

இவ்விஜயம் வெற்றி பெற்றதற்கு இந்திய வெளிநாட்டிலாகா பத்திரிகைத் தொடர்பு அதிகாரி திரு எம். ஆர். சிவராமகிருஷ்ணனின் முயற்சிகள் பெரிதும் காரணமெனலாம்.

## திரு நஞ்சப்பா வருகை

இந்தியா திரும்புவோர்களை ஏற்றுக்கொண்டு புனர் வாழ்வு அளிக்க இந்தியா தயாராக இருக்கிறதென்று ஸ்ரீமதி இந்திரா காந்தி சொல்லிய இருபத்தி நான்கு மணி நேரத்துக்குள்ளாக இந்திய அரசாங்க புனர் வாழ்வு இலாகா அதிகாரியான திரு நஞ்சப்பா டில்லியிலிருந்து கொழும்புக்கு வந்து இலங்கை இந்தியத் தலைவர்களான திரு எஸ். தொண்டைமான், ஜனாப் அஜீஸ் ஆகியோருடன் கலந்து பேசியது இலங்கை அரசாங்கத்துக்கு இந்தியாவின் நல்லெண்ணத்தில் நம்பிக்கை ஏற்பட உதவியது.

## இந்தியப் பிரஜா உரிமை

டில்லி ஒப்பந்தத்தின்படி நாடற்றவர்களுக்கு இலங்கைப் பிரஜா உரிமை வழங்க இலங்கை அரசாங்கம் இப்போதுதான் சட்டமியற்றியிருக்கிறது. அந்தச் சட்டமும் அநேகமாக அடுத்த மாதம்தான் முறையாக அமலுக்கு வருமென்று எதிர்பார்க்கப்படுகிறது. எனினும் ஒப்பந்தத்தைச் செயல்படுத்த இந்தியா காத்திருக்கவில்லை. ஒப்பந்தம் கைச்சாத்திடப்பட்ட 1964 அக்டோபர் மாதம் முதற்கொண்டே இந்தியா, இந்தியப் பிரஜாவுரிமை கேட்பவர்களுக்கு அவ்வுரிமை அளித்து வருகிறது. இதுவரையில் பதின்மூன்றுயிரத்துக்கு மேற்பட்டவர்களுக்கு இந்தியப் பிரஜா உரிமை வழங்கியிருக்கிறார்கள். —ரஜனி

ராசி

# நீலாத்ரி

## தீபாவளிக்கு புதிய ராசி தயாரிப்பு

முழுதும் புது அழகோடு தோற்றமளிக்க
புதிய ராசிப் பட்டு நீலாத்ரி.
கவர்ச்சிகரமான வண்ணம். கண்கவர்
புட்டா வேலைப்பாடு. அழகு மிகுந்த
பார்டர்கள். திலகம் புட்டாவுடன் கூடிய
புதிய ராசி நீலாத்ரி அணியுங்கள்.
புடவைக்கு ஏற்ற பட்டுச் சோளி அணியுங்கள்.

**ஸ்பெஷல் ஸம்பேஜ நிறமும்,**
**ஜாக்கார்ட் டிசைனும் உள்ளன**

*ஏர்-கண்டிஷன் வசதியுடன் கூடிய*
*எமது விற்பனை நிலையங்கள்:*



**ராதா சில்க் எம்போரியம்**
14. சன்னதித் தெரு.
மைலாப்பூர். மதராஸ்-4.

**ராதா சில்க்ஸ்**
தன் பில்டிங். மவுண்ட் ரோடு.
மதராஸ்-2.

**ராதா சில்க் எம்போரியம்**
வெஸ்டர்ன் இந்தியா ஹவுஸ்.
ஸர் பிரோஸ் ஷா மேத்தா ரோடு.
பம்பாய்-1.

**தீபாவளிக்காக இம்மாத ஞாயிற்றுக்கிழமைகளிலும் கடை உண்டு —**
**எமது பம்பாய் கிளைக்கு விஜயம் செய்யுங்கள்**




நாவுக்கினிய

# டி.எஸ்.ஆர்

## ஊறுகாய்கள்

டி. எஸ். ஆர். & கோ.,
கும்பகோணம்,
மதராஸ்

•

சிறு சேமிப்பில்
முதலீடு செய்யுங்கள்

Criterion-TSR-980

# என்ன சேதி?

## முழுத் தீர்வு ஆகாது

சர்க்கார் உதவி பெறும் பள்ளி ஆசிரியர் உள்பட தமிழக அரசு ஊழியர்கள் புதிய கிராக்கிப்படி விகிதங்கள் பெற்றிருப்பது குறித்து மகிழ்கிறோம். இதற்கான நடவடிக்கை எடுத்த அரசாங்கத்தைப் பாராட்டுகிறோம். ஒரே நாட்டில் ஒரே போல் வேலை செய்பவர்களிடம் மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கு ஒரு சம்பள விகிதமும், ராஜ்ய சர்க்கார் ஊழியர்களுக்கு அதைவிடக் குறைவான விகிதமும் அளிக்கப்படுவது நியாயமில்லை தான். எனவே ராஜ்ய சர்க்கார் சிப்பந்திகளின் ஊதியத்தை உயர்த்துவது அவர்களது பொருளாதாரத்துக்கு நலம் பயப்பதோடு, மத்திய ஊழியர் - ராஜ்ய ஊழியர் என்ற பாரபட்சத்தை அகற்றவும் உதவுகிறது.

இருப்பினும் இரண்டு கேள்விகள் எழுகின்றன. புதிய விகிதங்களுக்காகத் தேவைப்படும் ஏழு கோடி ரூபாயை அடுத்த ஆண்டில் எப்படித் திரட்டப் போகிறார்கள்? சர்க்கார் ஊழியர் பெற்ற நலனுக்காக, சமூகத்தில் வேறு யார் வரிச்சுமை தாங்கப் போகிறார்கள்?

அடுத்த கேள்வி, பணப் புழக்கம் அதிகரிப்பதால் விலைவாசிகள் மேலும் தானே ஏறும்? விலைவாசி உயர்வதும் அதற்காக ஊதியத்தை உயர்த்துவதும், இந்த ஊதிய உயர்வால் மீண்டும் விலைவாசி ஏறுவதும் ஏற்ற மரத்தின் இரண்டு குடங்களும் மாறி மாறி ஏறி இறங்குவதுபோல் என்று முன்பு ராஜாஜி சொன்னார். பொருளாதாரப் பிரச்னையின் இறுதியான தீர்வு விலைவாசிகளைக் குறைப்பதில்தான் உள்ளது.

## பாராட்டுக்குரிய பண்பு

'அறநிலையப் பாதுகாப்பு இலாகாவின் எல்லைக்குட்பட்ட ஆலயங்களில் இப்போது நடைபெறுகிற வழிபாடுகளில் எவ்விதக் குறைபாடும் ஏற்படாமல் பார்த்துக் கொள்வோம்' என்று அறநிலையப் பாதுகாப்பு அமைச்சர் திரு நெடுஞ்செழியன் கூறியிருப்பது பல ஆஸ்திகர்களின் உள்ளங்களைக் குளிர்விக்கும். 'மத நிறுவனங்களின் பணிகளில் தலையிட மாட்டோம்; இப்போது ஆலயங்களிலுள்ள நிர்வாக முறையில் எவ்வித மாறுபாடும் செய்ய மாட்டோம்' என்றெல்லாம் காரைக்குடி இந்து மதாபிமான சங்கத்தில் அமைச்சர் கூறியிருக்கிறார். தனிப்பட்ட முறையில் தங்களது மதக் கொள்கை எதுவாயினும், தமிழகத்தில் தழைத்துள்ள தெய்விக உணர்வுக்குத் தலைவணங்கி, அதனில் தலையிடாதிருக்கும் பண்பாட்டினை தி. மு. க. அரசு பெற்றிருப்பது பாராட்டுக்குரியதாகும்.

இந்த நல்ல சமாசாரத்தை ஒரு நல்ல சந்தர்ப்பத்தில் நினைவு கூர்ந்து மக்களுக்கெல்லாம் தெரியப்படுத்தியுள்ளார் திரு எம். ஏ. முத்தையா செட்டியார் அவர்கள். 1965-ல் ஜகத்குரு ஸ்ரீ சிருங்கேரி சங்கராசாரிய சுவாமிகளின் முன்னிலையில் ராஜா அண்ணாமலை புரத்தில் சண்டி ஹோமம் நடைபெற்ற புனித ஸ்தலத்தில் தற்போது எழுப்பப்பட்டுள்ள சிருங்கேரி ஜகத்குரு பிரவசன மந்திரத்தின் திறப்பு விழாவின்போது இந்த நல்ல செய்தி மக்கள் காதில் தேனாகப் பாய்ந்தது.

## எதிர்பாரா நிகழ்ச்சி

முதலமைச்சர் போன்ற பதவியிலிருப்பவர்களைப் பேட்டிக் காண நேரம் கிடைப்பது அரிது. அப்படிக் கிடைத்தாலும் விழாக் கூட்டங்கள் ஆகியவற்றுக்கு ஒத்துக் கொள்ளச் செய்வது மிகவும் கடினம். ஏனெனில் அவற்றைவிட எவ்வளவோ முக்கிய அலுவல்கள் அவர்களுக்கு இருக்கும். இப்படி எந்த விதமான பேட்டியும் விசேஷ அழைப்பும் பெறாமல், சாதாரணமாகத் தபாலில் அனுப்பப்பட்ட அழைப்பை ஏற்று ஒரு விழாவுக்குச் சென்று பங்கெடுத்துக் கொண்டார் முதல் அமைச்சர் திரு ஸி. என். அண்ணாதுரை என்று கேள்விப்படும் யாருக்குமே மட்டற்ற மகிழ்ச்சியும் அவரது பெருந்தன்மையான குணத்தைக் கண்டு வியப்பும் ஏற்படாமல் இருக்காது.

எண்பதாண்டு நிறைவு பெற்ற சமூக சேவகர் ஸ்ரீ டி. எஸ். ராமசுவாமி அய்யர் அவர்களைப் பாராட்ட சென்னை மயிலையில் ஏற்பாடு செய்யப்பட்ட கூட்டத்துக்குத்தான் திரு அண்ணாதுரை இப்படி எதிர்பாராமல் விஜயம் செய்து சபையோரை வியப்பில் ஆழ்த்தி விட்டார். திரு அண்ணாதுரையின் செய்கை அவரை உயர்த்தியதோடு மட்டுமின்றி, ஸ்ரீ ராமசுவாமி அய்யரின் சமூக நலப் பணி எவ்வளவு உயரியது என்பதையும் எடுத்துக்காட்டி விட்டது!



'விவரமறியாப் பருவத்திலே நடந்தாலும் கல்யாணம் கல்யாணம்தான். எத்தனைதான் சமூகம் நாகரிகப் பாதையில் முன்னேறினாலும் இந்த உணர்ச்சிக்கு இடம் கொடுத்துத்தான் ஆக வேண்டும். சம்பிரதாய வாழ்வைப் புறக்கணிக்கக் கூடாது.'

கதையின் இந்த மையக் கருத்தைச் சந்திக்க மூன்று மணி நேரங்கள் காத்திருக்க வேண்டும். இருந்தாலும் பாரதப் பண்புக்கு இழுக்குச் சேர்க்காத நல்ல முடிவு.

ஆரம்பத்தில் ரசிகர்களின் மனத்தைக் கதையின்பால் ஈர்த்து, இடையே தற்காலத் திரைப்படத்துக்குரிய சகல தர்மங்களையும் வழுவாமல் கடைப்பிடித்து, முடிவில் மனத்துக்கு ஒரு நிறைவைத் தர முயல்கிறதே, இதற்காகவாவது மூன்று மணி நேரம் பொறுமையைக் கடைப்பிடிக்கக் கூடாதா?

லஞ்சீல், பின்கி — இவ்விரு நடிகர்களின் மனத்துக்கிசைவான நடிப்பைத் தொடர்ந்து உத்தம் குமாரும் வைஜயந்தி மாலாவும் மெருகு சேர்க்கும் இப்படத்தில் ஆலோ சர்க்காரின் டைரக்ஷனும் கனாய் டேயின் சிறப்பான ஒளிப்பதிவுப் புலமையும் ஒத்துழைத்துப் பல குறைகளையும் மறைக்கின்றன. இதுபோன்ற படங்களைப் பார்த்துப் பார்த்துச் சலிப்புத் தன்மையை மேற்கொண்டவர்களுக்குச் **சிறு சங்கிப்பு** அவ்வளவாக ஏமாற்றம் தராது.

## பந்தயம்

ஒன்றுயிருந்த இரு ஆப்த நண்பர்கள் பிரிந்து அவரவர்களின் கருத்துக்கு ஏற்பத் தனித்தனியே வாழ்ந்து, ஐந்தாண்டுகளுக்குப் பிறகு சந்தித்து அன்று யாருடைய வாழ்க்கை வெற்றி பெற்றிருக்கிறதென்பதை முடிவு செய்வதென்று தாங்களாகவே பந்தயம் ஏற்படுத்திக் கொள்கிறார்கள். கதை சுவாரஸ்யமான பல திருப்பங்களுடன் செல்லுகிறது. வசனம் நகைச்சுவையோடு நன்றாயிருக்கிறது. மதுரை திருமாறன் பாராட்டுக்குரியவர்.

ஆரம்பத்திலிருந்தே ஏ. வி. எம். ராஜன் நன்றாய் நடித்திருக்கிறார். நல்ல பாத்திரம்; நல்ல நடிப்பு. நல்ல வழியிருந்து சரிப்படாமல் பொல்லாதவனாக மாறும் கட்டத்திலிருந்து அவர் நடிப்பு களைகட்டிவிடுகிறது.

ஜெமினி கணேசனின் நடிப்பில் நல்ல விறுவிறுப்பு இருக்கிறது. நண்பன் சோமுவைப் பிரியும் கட்டத்திலும், கடைசியில் திருடனான சோமுவைச் சந்தித்துக் கண்ணீர்விடும் கட்டத்திலும் சிறப்பாக நடித்திருக்கிறார்.

விஜய நிர்மலாவுக்கு நல்ல சான்ஸ். ஆனால் அவர் இன்னும் நடிப்பில் அநுபவம் பெற வேண்டும்.

''இரவு நடக்கின்றது'' என்ற பாட்டு நல்ல சந்தர்ப்பத்தில் பாடப்படுகிறது. பாட்டும் நன்றாயிருக்கிறது.

முத்துவுக்கு ஒரு காதலியை ஏற்படுத்தியது போல் சோமுவுக்கும் ஒரு காதலியை ஏற்படுத்தி நம்மையெல்லாம் கொடுமைப்படுத்தாமல் விட்டதற்குப் படத் தயாரிப்பாளர்களைப் பாராட்ட வேண்டியதுதான்!

நாகேஷ் உற்சாகமாக நடித்து ஹாஸ்ய வெடிகளை உதிர்க்கிறார். அவருக்கு ஒரு ஜோடியைச் சேர்த்துக் கூத்தடிக்காமல் விட்டது படம் பார்ப்பவர்களின் பாக்கியம்!

எம்கே மூவீஸின் ''பந்தயம்'' சுவையான கதையும் நல்ல நடிப்பும் கொண்ட படம்.



சோடீ ஸீ முலாகாத் (ஹிந்தி)

## திருமணம்



சிரஞ்சீவி: சந்தானம்
M.B.B.S., D.I.H. (செய்வேலி)

சௌபாக்கியவதி: ஜயலக்ஷ்மி
B. A.

இவர்களின் திருமணம் சமீபத்தில் கோவையில் மிக சிறப்பாக நடைபெற்றது.

வாழ்க மணமக்கள் !

அத்தியாயம் 12

# யாரோ இவர் யாரோ?



## 'சோ'

ராஜரத்தினம் வந்து கொண்டிருந்ததை முத்துவோ, கிரிஜாவோ கவனிக்கவில்லை. 'காதலுக்குக் கண்ணில்லை' என்று தெரியாமலா சொல்லியிருக்கிறார்கள்? காதல்என்பது ஒரு குருட்டு உணர்ச்சி என்பதற்கு இதைவிட வேறு என்ன சான்று வேண்டும்? அப்படிப்பட்ட உணர்ச்சியாகப்பட்ட காதலில் விழுந்துவிட்ட கிரிஜாவுக்கும் முத்துவுக்கும் ராஜரத்தினம் தங்களை நெருங்கிக் கொண்டிருந்தது தெரியாமலிருந்தது ஆச்சரியமல்ல. ஆனால் ராஜரத்தினத்திற்கும் அவர்கள் இருவரும் நெருங்கி நின்று அளவளாவிக் கொண்டிருந்தது தெரியாமல் இருந்ததே, அது தான் ஆச்சரியம்! 'இந்த டாக்டரை நம்பி எத்தனை நாள் இருப்பது? ஒரு வாரம் 'டைம்' கொடுத்தது கூடத் தவறு போலிருக்கிறதே. இப்போது என்ன செய்யலாம்' என்று சிந்தித்துக்கொண்டிருந்தார் அவர். ஒரு மாபெரும் பிரச்னையைப் பற்றிய ஆழ்ந்த சிந்தனையில் அமிழ்ந்து விட்டிருந்ததால் அவர் முத்துவையும் கிரிஜாவையும் கவனிக்கவில்லை.

முத்துவும் கிரிஜாவும் அர்த்தமே இல்லாமல் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அந்த அளவுக்கு அவர்களுடைய காதல் வளர ஆரம்பித்து விட்டது. செடிக்குப் பின்னால் மறைந்திருந்த எதிராஜின் மனம் நிம்மதியடைந்தது. 'இனி முத்து இந்த வீட்டிலிருந்து வெளியேற்றப்படாமல் கிரிஜா கவனித்துக் கொள்வாள். அதுவரையில் தானும் இங்கிருந்து எப்படியாவது நெக்லெஸைக் கண்டுபிடித்து விடலாம்' என்று நினைத்து மகிழ்ந்தான் எதிராஜ்.

இவர்கள் இருந்த இடத்தை நெருங்கியவுடன்தான் ராஜரத்தினத்தின் கண்களுக்கு முத்துவும், கிரிஜாவும் திடீரென்று பிரத்யட்சமானார்கள்.

''உம்?'' என்று கேட்டார் ராஜரத்தினம்.

''உம்'' என்று பதிலளித்தாள் கிரிஜா.

''உம்'' என்று சிரித்தான் முத்து.

''உம்? உம்?'' என்று மீண்டும் வலியுறுத்திக் கேட்டார் ராஜரத்தினம். 'நீங்கள் சொல்வதற்கு அர்த்தம் புரியவில்லையே' என்ற பாணியில் இருந்தது அவர் கேட்ட 'உம், உம்.'

''உம் உம்'' என்று தலையசைத்தாள் கிரிஜா. 'சொல்லுவதற்கு ஒன்றுமில்லை. சும்மாத் தோட்டத்துக்கு வந்தோம்' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக வெளி வந்தது கிரிஜாவின்உம்உம்.

'உம் உம்' என்று நகர ஆரம்பித்தான் முத்து. 'ஏதோ தப்பித்தோம். இப்போது பேசாமல் உள்ளே போகலாம்' என்ற கெஞ்சுதலே முத்துவின் 'உம்உம்.'

செடிக்குப் பின்னாலிருந்த எதிராஜிற்கு ஒன்றும் புரியவில்லை. மொத்தம் ஒன்பது 'உம்'கள் அவன் காதில்விழுந்தன. ஒரு 'உம்'மிற்காவது அவனுக்கு அர்த்தம் புரியவில்லை. சரி போகட்டும் என்று நினைத்தான் எதிராஜ். 'உம்' என்று சலித்துக் கொண்டான்.

முத்து, கிரிஜா, ராஜரத்தினம் மூவரும் ஒருவரை ஒருவர் பார்த்து விழித்தனர். பத்தாவது 'உம்' யாருடையது என்று யாருக்கும் தெரியவில்லை. முத்துதான் தன்னை 'என்ன விஷயம்?' என்று கேட்கிறான் என்று ராஜரத்தினம் நினைத்துக் கொண்டார். உடனே முத்துவைப் பார்த்து, ''டாக்டர்! மனசிலே பட்டதை மறைக்காமல் சொல்லிடறேன். நீங்க இன்னும் அசோக்கைக் குணப்படுத்தலே. அதைக் கண்டாலே ஓடறீங்க. அது உங்களைத் துரத்தறது. கேட்டா 'எக்ஸர்ஸைஸ்' கொடுக்கறேன்னு சொல்லிடறீங்க. எத்தனை நாள் ஸார் இப்படியே எக்ஸர்ஸைஸ்?'' என்று தம் ஆதங்கத்தைத் தாங்க முடியாமல் கூறியே விட்டார்.

முத்து பதில் சொல்வதற்கு முன்னால் கிரிஜா பேச ஆரம்பித்து விட்டாள். ''நானே அவர்கிட்டே சொல்லிட்டேன் அப்பா. இன்னும் ரெண்டு மூணு நாள்லே குணமாயிடும்னு சொல்றார்.''

''சரி! ஏதோ செய்யறதைச் சீக்கிரம் செய்யுங்க'' என்று ராஜரத்தினம் சற்று அவநம்பிக்கையாகவே கூறி விட்டு, அந்த இடத்தை விட்டு நகர ஆரம்பித்தார். முத்துதான் அந்தஇடத்தை விட்டுப்போகிறான் என்று நினைத்த எதிராஜ் ராஜரத்தினத்தின் காலைப் பிடித்து இழுத்து விட்டான். 'பொதேல்' என்று விழுந்தார் ராஜரத்தினம். முத்துவின் கண்களில் நீர் தளும்பியது. அவரை அப்படியே தூக்கி நிறுத்தினான். ''ஸார்! அசோக்கைக் குணப்படுத்தறதுக்காக இப்படியா என் கால்லே சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்காரம் செய்யறது? உங்க வயசென்ன, என் வயசென்ன? என் கால்மேல் விழாதிங்க ஸார். நான் எப்படியாவது அசோக்கைக் குணப்படுத்திடறேன்'' என்று நாத்தழு தழுக்கக் கூறினான் முத்து. இதற்குள் எதிராஜ் தன் தவற்றை உணர்ந்து விட்டான். முத்து ஏடாகூடமாக உளறித் தான் மறைந்திருப்பதைக் காட்டிக் கொடுத்துவிடப் போகிறானே என்று பயந்து, அவனை மேலே பேச விடாமல் அடக்க எண்ணி, இப்போது அவன் காலை ஒரு தட்டுத் தட்டினான். முத்து தன் காலடியில் திடீரென்று விழுவான் என்று ராஜரத்தினம் எதிர்பார்க்கவேயில்லை... அவனை எழுப்பி, ''டாக்டர் ஸார்! நீங்க சொன்னதே எனக்குப் போதும். காலிலே ஏன் விழறீங்க? என்ன இருந்தாலும் நீங்க டாக்டர். நான் பேஷன்ட். அதாவது என் நாய் பேஷன்ட். கூடிய சிக்கிரம் அசோக்கைக் குணப்படுத்திருங்க'' என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டு நகர்ந்தார். போகும் போது, ''வாம்மா கிரிஜா!'' என்று அவர் அழைக்க, கிரிஜா அந்த இடத்தையும், முத்துவையும் விட்டுப் பிரிந்து ராஜரத்தினத்தோடு வீட்டினுள் சென்று விட்டாள். எதிராஜ் செடி மறைவிலிருந்து வெளிப்பட்டான். ''டேய் முட்டாள். நான் சொன்னது மெய்யாப் போயிருச்சு, பார்த்தியா? அந்தப் பொண்ணு உன்னைக் காதலிக்கிறேன்னு சொல்லிச்சு, இல்லையா?'' என்று முத்துவைக் கேட்டான் எதிராஜ்.

''உம்'' என்றான் முத்து.

எதிராஜுவுக்குக் கோபம் பீறிட்டுக்கொண்டு வந்தது. ''இன்னொரு தரம் 'உம்'ன்னியானா பல்லைப் பேத்துப்பிடுவேன். இப்பத்தான் ஒன்பது 'உம்' கேட்டிருக்கிறேன்'' என்றான்.



''இப்ப நாயைக் குணப்படுத்தணுமே. என்ன செய்யறது?'' என்று கேட்டான் முத்து.

''என்ன செய்வியோ தெரியாது. அசோக் கொஞ்சம் கொஞ்சமா குணம் ஆவணும். அதுக்கான வழியைப் பாரு. இல்லாட்டி நம்ம நிலை டேஞ்சர்தான்'' என்று முத்துவை எச்சரித்து விட்டு அந்த இடத்தை விட்டு எதிராஜ் அகன்றான்.

தன்னந் தனியே விடப்பட்ட முத்து, அசோக்கை எப்படிக் குணப்படுத்துவது என்று புரியாமல், அதற்கு என்ன செய்யலாம் என்று யோசித்து ஒரு தீர்மானத்துக்கும் வந்தான். 'ரவியைக் கேட்க வேண்டியதுதான். அவனுக்குத் தெரியாத விஷயமே கிடையாது' என்று முடிவு செய்து கொண்டான் முத்து.

ஃ ஃ ஃ

'இந்த ரவி இப்படியா ஏமாற்று வேலை செய்கிறார்? சபாபதியின் மகன் என்பதை அடியோடு மறைத்துத் தன் தந்தையையே ஏமாற்றியிருக்கிறாரே! உடனே அவரைச் சந்தித்து நடுங்க வைக்க வேண்டும்' என்ற தீர்மானத்தோடு, புறப்பட்ட சித்ரா நேரே ரவியின் வீட்டுக்குச் சென்றாள்.

'மிஸ்டர் ரவி' என்று வாசலில் சித்ராவின் குரல் கேட்டு ஓடோடி வந்து கதவைத் திறந்தான் ரவி. ஆகா! சித்ராவேதான். ரவியின் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடியது.

''உள்ளே வரலாமா மிஸ்டர் ரவி?'' சித்ராவின் குரல் குழைந்தது.

''ப்ளீஸ் கம் இன்! சித்ரா, என்ன இது திடீர் விஜயம்?''

''சும்மாத்தான் வந்தேன். இப்படி வெளியே போய்க்கிட்டிருந்தேன். அப்படியே உங்களையும் பார்த்துப்பிட்டுப் போகலாம்னு வந்தேன்.''

''என் வீடு உங்களுக்கு எப்படித்தெரிஞ்சுது?'' என்று கேட்டான்.



''ஒரு நாள் இந்த வழியாப் போன போது எங்கப்பாதான் உங்க வீட்டைக் காட்டினார் ''

''வெரி குட்! வெரி குட்! காப்பி சாப்பிடறீங்களா? பக்கத்து ஹோட்டல்லேருந்து வாங்கிக்கிட்டு வரேன்.''

''வேண்டாம்! வேண்டாம்! ஆமாம்; நீங்க மட்டும் தனியா இருக்கீங்களே, உங்க அப்பா, அம்மா எல்லாம் எங்கே இருக்காங்க?'' ஒன்றுமே தெரியாதவள் போல் கேட்டாள் சித்ரா.

''அவங்கள்ளாம் ஊர்லே இருக்காங்க.''

''எந்த ஊரு?''

''மதுரை'' என்று அவசரத்தில் கூறிய ரவி சமாளித்துக் கொண்டு, ''மதுரைக்குப் பக்கத்திலே சிதம்பரம். அங்கேதான் இருக்காங்க.''

''மதுரைக்குப் பக்கத்திலே சிதம்பரமா?''

''கொஞ்சம் தள்ளி யிருக்குது. அவ்வளவுதான்.''

''உங்கப்பா பேர் என்ன?''

''இது....இது.... அதான் கனக சபை.''

''கனகசபையா?''

''சிதம்பரத்திலே இருக்கிறது கனக சபைதானே?''

''கனகசபை, சபாபதி எல்லாம் ஒண்ணுதான்!''

''சபாபதியா? நீங்க என்ன சொல் றீங்க?''

''கனகசபை, சபாபதி, நடராஜன், பரமசிவன் எல்லாம் ஒண்ணுதானே!'' என்றாள் சித்ரா சிரித்துக் கொண்டே.

''ஓ! அதைச் சொல்லுறீங்களா? ஆமாம்!''

''அதனாலே நான் என்ன சொல்றேன், உங்கப்பா பேரைச் சபாபதின்னு மாத்தி வெச்சுட்டா என்ன?''

''எதுக்காக மாத்தணும்?''

''ஏற்கனவே அப்படித்தான் இருக்குதா?''

ரவி சந்தேகத்தோடு சித்ராவைப் பார்த்தான்.

''என்ன மிஸ்டர் ரவி, அப்படிப் பார்க்கறீங்க?''

''ஒண்ணுமில்லேயே...''

''உங்களுக்கு உங்க அப்பா, அம்மாவைத் தவிர வேறே உறவு மனுஷங்களே இல்லேயா ஸார்?''

''நிறையப்பேர் இருக்காங்க.''

''மெட்ராஸ்லே யாரும் இல்லேயா? இருந்தா அவங்க வீட்டுலே நீங்க தங்கலாமே. அதுக்குத்தான் கேட்டேன்.''

''உறவுக்காரங்க மெட்ராஸ்லே இருக்காங்க. இருந்தாலும் அவங்க வீட்டுலே நான் தங்க முடியாது. அவங்களுக்கும் எங்கப்பாவுக்கும் கொஞ்சம் மனஸ்தாபம்.''

''அதனாலே என்ன ஸார்? நைஸா உங்கப்பா பேரைச் சொல்லாம அவங்க கிட்ட சிநேகிதமாயிடலாமே!''

''அதெப்படி முடியும்?''

''ஏன் ஸார், உங்களுக்கு இதெல்லாம் சொல்லித் தரணுமா என்ன?''

ரவிக்குச் சந்தேகம் ஊர்ஜிதமாகிக் கொண்டிருந்தது. இந்தச் சித்ராவுக்குத் தன் பித்தலாட்டம் புரிந்துவிட்டதோ என்று பயப்பட்டான். இருந்தாலும் அதைக் காட்டிக்கொள்ளாமல், ''நான் என்ன பொய் சொல்றதுலே நிபுணன் என்று சொல்றீங்களா?'' என்று அப்பாவிபோல் முகத்தை வைத்துக் கொண்டு கேட்டான்.

அவன் நெஞ்சழுத்தத்தைப் பார்த்துச் சித்ரா வியந்தாள்.

''அதுக்காகச் சொல்லலே ஸார். உங்க உறவுக்காரரை ரேஸ் கோர்ஸ்லே பார்த்து டிப்ஸ் கொடுங்க. அந்தக் குதிரை ஜெயிச்சுட்டா அப்புறம் அவர் நீங்க சொல்றபடியெல்லாம் கேட்பாரு. ரொம்ப சுலபமான வழியாச்சே அது!''

ரவியின் சந்தேகம் தீர்ந்தது. எப்படியோ சித்ராவுக்குத் தான் யார் என்பது தெரிந்து விட்டது என்பதை உணர்ந்தான்.

''நான் யாருன்னு உங்களுக்கு எப்படித் தெரிஞ்சுது?'' என்று அவளையே கேட்டான் ரவி.

''நீங்கதானே சொன்னீங்க. மதுரைப் பக்கத்திலே இருக்கிற சிதம்பரத்திலே இருக்கிற கனகசபை மகன் தானே நீங்க?''

''விளையாடாதீங்க. எங்கப்பா சபாபதிதான்னு உங்களுக்கு எப்படித் தெரிந்தது?''

''இந்த லெட்டரைப் பாருங்க'' என்று சித்ரா சின்னதுரைக்கு சபாபதி எழுதியிருந்த தபால் கார்டை ரவியிடம் கொடுத்தாள்.

அதைப் படித்த ரவி, ''எங்கப்பாவுக்கு மூளையே இல்லே! இதை உங்கப்பா பார்த்துட்டாரா?''

''இன்னும் இல்லே. இனிமேதான் அவர் கிட்டக் கொடுக்கணும்.''

''தயவு செய்து இதை அவர்கிட்ட கொடுக்காதீங்க. அவருக்கு இந்த விஷயம் தெரிஞ்சுட்டா அப்புறம் என் முகத்துலே கூட முழிக்க மாட்டாரு!''

''நல்லதுதானே அது. ரேஸ் பழக்கமாவது குறையும்!''

''என்னை நம்புங்க.''

''இவ்வளவு நடந்த பிறகா?''

# இதோ: பாரிஸ் போல எழிலின் உறைவிடமான டால்க்





## "ஒன் டச் ஆப் பாரிஸ்"

என்றுமே பாரிஸ் உங்கள் அருகில் இருந்ததில்லை! அதைத் தொட்டெடுத்து வருவதே போல் ஆன் பிரெஞ்ச் உங்களுக்கு அளிக்கிறது ''ஒன் டச் ஆப் பாரிஸ்''—மேனியிலே பூசி மகிழ உன்னதமான ஒரு டால்க். பாரிஸ் போல் எழில் கூட்டி, உள்ளக் கிளர்ச்சியைத் தூண்டும் டால்க். நறுமணமோ ஆன் பிரெஞ்சுக்கே உரிய பிரெஞ்ச் சுகந்தம். இன்றே பூசி மகிழுங்கள் 'ஒன் டச் ஆப் பாரிஸ்'ஐ

கூடவே கிடைக்கிறது: ''லேடி லாவெண்டர்'' ஆன் பிரெஞ்ச் நறுமணம் கொண்டது.




சுகந்தம் போல் உங்கள் மேனி மீது உறவாடும் டால்க்

**ஆன் பிரெஞ்சு டால்க்**

ரெஜிஸ்டர்டு யூஸர்: ஜெப்ரி மானேர்ஸ் அண்டு கம்பெனி லிமிடெட்.



25-0-TM

# பூரணமான இருமல் கட்டுப்பாட்டுக்கு




# க்ளைகோடின்

## டெர்ப் வசாகா

க்ளைகோடினுடைய மருத்துவ அங்கீகாரம் பெற்ற பார்முலா, இருமலால் பாதிக்கப்பட்ட பல இடங்களிலிருந்தும் இருமலை விரட்டியடித்துவிடுகிறது. க்ளைகோடினின் செயல் திறன் ● மூளையில்—க்ளைகோடின், தன்னியல்பாக வரும் இருமலைத் தூண்டும் இருமல் கேந்திரத்தை சரியான சமயத்தில் பத்திரமாகவும், பலனுள்ள முறையிலும் கட்டுப்படுத்துகிறது ● தொண்டையில்—க்ளைகோடின் அடைப்பை அகற்றி எரிச்சலையும் வலியையும் ஆசுவாசப்படுத்தி, தொண்டையின் மென்மையான பகுதிகளை, கிருமிகள் பாதிக்காமல் பத்திரமாகப் பாதுகாக்கிறது ● மார்பில்—க்ளைகோடின், சுவாசக் குழாய்கள் மற்றும் மார்பின் இறுகிய நிலையைத் தளர்த்தி, கஷ்டமின்றி சுவாசிக்க உதவுகிறது ● நுரையீரல்களில்—மூச்சுத் திணறவைக்கும் சளியைக் கரைத்து, 'ஆறப் படிந்த' சளியை அகற்றி, அடைப்பை நீக்குகிறது.

எப்பொழுதும் க்ளைகோடின் கைவசம் இருக்கட்டும்.




**க்ளைகோடின்—30 வருடங்களுக்கு மேலாக**
**மிகவும் அதிகமாக விற்பனையாகும் கைகண்ட வீட்டுநிவாரணி**

4 அளவுகளில் கிடைக்கிறது. அலெம்பிக் தயாரிப்பு *Alembic*

everest/363 i/Acw tm

''சித்ரா, நிஜமாகச் சொல்றேன். எனக்கு ரேஸைப் பத்தி ஒண்ணுமே தெரியாது. என் போதாத காலம் நான் சொல்ற குதிரையெல்லாம் கெலிக்குது. எப்படியாவது உங்கப்பா ரேஸ் பழக்கத்தை நான் நிறுத்திக் காட்டறேன்.''

''நீங்க சொல்ற பொய்களிலே இதுவும் ஒண்ணாயிருக்கலாம்.''

''கிடையவே கிடையாது. நிச்சயமா உங்கப்பா ரேஸ் பக்கமே போகாதபடி நான் செய்து காட்டறேன். எங்கப்பா மேலே ஆணை.''

''சபாபதி மேலேயா? கனகசபை மேலேயா?''

''பளீஸ்! நான் சொல்றதை நம்புங்க. நான் எதுக்காக மெட்ராஸ் வந்திருக்கேன் தெரியுமா? பிளவுபட்டிருக்கிற நம்ம ரெண்டு குடும்பத்தையும் சேர்த்து வைக்கத்தான். எங்கப்பா கிட்ட வாக்குக் கொடுத்துட்டு வந்திருக்கிறேன்.''

''அதுக்காகப் பொய் சொல்றதுன்னு துணிஞ்சிட்டீங்களா?''

''நல்லதைச் சாதிக்கப் பொய் சொன்னா அதுலே தப்பே கிடையாது. ஆயிரம் பொய் சொல்லி ஒரு கல்யாணத்தைப் பண்ணுன்னு பெரியவங்களே சொல்லியிருக்காங்க.''

''நீங்க இப்ப யாருக்குக் கல்யாணம் செய்து வெக்கப் போறீங்க?''

''எனக்குத்தான்.''

''பொண்ணு யாரு?''

''நீங்கதான்!''

சித்ரா திடுக்கிட்டாள்.

''நான் தவறாகப் பேசியிருந்தா மன்னிச்சிருங்க. மனசுலே பட்டதைச் சொல்லிட்டேன். நான் உங்களைக் கல்யாணம் செய்துக்கறதைத்தான் எங்கப்பாவும் அம்மாவும் விரும்பறாங்க. ஆனா உங்கப்பாவோ எங்க குடும்பத்திலே சம்பந்தமே வெச்சுக்க ஒப்புக்கொள்ள மாட்டாரு. நம்ம கல்யாணம் நடந்தா இரண்டு குடும்பமும் ஒண்ணா சேரும். இதையெல்லாம் சுபமா முடிச்சு வெக்கத்தான் உங்கப்பாவின் சிநேகிதத்தைப் பிடிச்சேன். நான் செய்தது தப்பா?''

சித்ரா பதிலே பேசவில்லை.

''ஏன் பதிலே பேச மாட்டேன்கிறீங்க. நான் உங்களைக் கல்யாணம் பண்ணிக்கிறதுலே உங்களுக்கு கொஞ்சம்கூட இஷ்டமே இல்லேன்னா, சொல்லிடுங்க. நான் இப்பவே ஊருக்குத் திரும்பிப் போயிடறேன்.''

''அப்புறம்?''

''திரும்பி வந்து முயற்சி பண்றேன். அவ்வளவு சுலபமா உங்களை விட்டுடறதா இல்லே நான்.''

''எனக்கு இஷ்டமில்லேன்னா?''

''என்னைப் பார்த்து இஷ்டமில்லேன்னு சொல்ல உங்களாலே முடியுமா?''

''முடியுமே!''

''அப்படிச் சொல்லிடாதீங்க. இப்ப இஷ்டமில்லாமே இருக்கலாம். போகப் போக உங்களுக்கு என் மேலே அன்பு வந்துவிடும்.''

''அன்பு வரலேன்னு?''

''அவ்வளவுதான் நம்ம தலை விதி அப்படின்னு நினைச்சுக்கிட்டு, அன்பு வராமலே கல்யாணம் செய்துக்க வேண்டியதுதான்.''

அவனுடைய பிடிவாதம் சித்ராவுக்குப் பிடித்திருந்தது. ''மிஸ்டர் ரவி, என்னாலே உங்களைப் புரிஞ்சுக்கவே முடியலே'' என்று சித்ரா கூறிக்கொண்டிருக்கும்போது வாயிலில் பட்டாணியன் குரல் கேட்டது: ''ரவி சாப்! ரவி சாப்!''

ரவி திடுக்கிட்டான்.

''நீங்க போயிட்டு அப்புறம் வரீங்களா?''

''என்ன இது திடீர்னு?''

''ஒண்ணுமில்லே. என் சிநேகிதன் வந்திருக்கான். நான் எல்லாம் அப்புறம் விவரமாச் சொல்றேன். அந்த லெட்டரை மட்டும் என்கிட்ட இப்ப கொடுத்திருங்க.''

''பயப்படாதீங்க ரவி. நான் இதை அப்பா கிட்ட சொல்லலே. ஆனா லெட்டரை உங்ககிட்ட இப்பக் குடுக்க மாட்டேன். இது எங்கிட்டேயே இருக்கட்டும். தாற்காலிகமாக இந்த விஷயம் அப்பாவுக்குத் தெரியாம பார்த்துக்கறேன்'' என்று கூறிவிட்டுச் சித்ரா வெளியே வந்தாள்.

சித்ராவைக் கவனிக்காத பட்டாணியன், ''ரவி சாப்!'' என்று மீண்டும் கூவினான்.

சித்ரா அவனைப் பார்த்தும் பாராதவள் போல் நகர்ந்தாள். ''உனக்கு ஏதாவது அறிவு இருக்கிறதா? வீட்டுக்கு யாரோ வந்திருக்காங்க. அவங்க எதிரிலே வந்து கூச்சல் போடறியே! உன்னாலே ஆன உபகாரம் என்னைச் சந்தி சிரிக்க வெச்சுடு'' என்று ரவி பட்டாணியனிடம் எரிந்து விழுவதையும் கேட்டுக் கொண்டேதான் போனாள். ரவி சிறந்த பொய்யனா, இல்லே, கடன் வாங்கி அவதிப்படும் சிறந்த ஊதாரியா என்று அவளால் நிச்சயம் செய்ய முடியவில்லை.

(தொடரும்)

## நான்தான் ருக்கு...!

நான் யார் தெரியறதோ? தெரியல்லே? இந்தப் பாவாடை சட்டையைக் கழட்டிட்டு, நகையெல்லாம் எடுத்துட்டு, பின்னலே அவுத்துட்டு, ஃப்ராக் போட்டுண்டு நான் ஒக்காந்திட்டா அப்போ என்னை ஒங்களுக்கு அடையாளம் தெரிஞ்சுடும்.... ஆமாம், இந்த வாரத்துக் கல்கி அட்டேலே ஒக்காந்துண்டிருக்கேனே, அந்தப் பாப்பா தான் நான்னு தெரிஞ்சுப்பேள்.



ஆனா அப்புறமும் கேள்வி கேப்பேள். அட்டேலே இருக்கற அந்தப் பாப்பா யார், அதும் பேரு என்ன, அது யாராத்துக் கொழந்தே, அதை ஏன் கல்கி அட்டேலே போட்டுருக்கான்னுல்லாம் கேப்பேள். அந்தப் பாப்பா — அதாவது நான்தான் — ருக்கு. ருக்குன்னா ருக்மிணி. ருக்மிணிக்குப் புருஷர் கிருஷ்ணன்தானே? எங்க பாட்டி ருக்மிணியோடே புருஷரும் கிருஷ்ணர்தான். ரா. கிருஷ்ணமூர்த்தி அப்படீன்னுவா. ஆமாம், கல்கி பொண்ணு ஆனந்தியை ஒங்களுக்குத் தெரியுமே! ஆனந்தி பொண்ணுதான் இந்த அட்டைப் பாப்பா — நான்!

என்னை எதுக்குத் தெரியுமோ அட்டேலே போட்டுருக்கா? கொழந்தைகளுக்காகப் பவுடர், ஸோப் எல்லாம் பண்ற ஜான்ஸன் கம்பெனிக்காரா இருக்காளோல்லியோ? அவா மூணுவிதமான வயசைச் சேர்ந்த மூணு கொழந்தைகளுக்குப் பிரைஸ் தரா. என் வயசு கொழந்தைகளுக்குள்ளே எனக்குத்தான் பிரைஸ் அடிச்சுது. எவ்வளோ தெரியுமோ? 2500 ரூபாயாக்கும்.

இது அழகுக்காக, ஆரோக்யத்துக்காக எனக்குக் கெடைச்ச ப்ரைஸ். புத்திசாலித்தனத்துக்காகப் போட்டி நடத்ினா அதுலேயும் பிரைஸ் அடிப்பேனாக்கும்.

நான் இப்படியே ஆரோக்யமா, சமத்தா இருக்கணும்னு கல்கி வாசகாள்ளாம் ஆசீர்வாதம் பண்ணுங்கோ. நமஸ்காரம், வணக்கம், டாடா!

# விண்வெளியில் பண் தந்தவர்

நியூயார்க் பெருநகரில் உள்ள புகழ் பெற்ற பிராட்வே கலை அரங்கம் அன்றிரவு ரசிகப் பெருமக்களால் நிரம்பிவழிந்தது. பெர்னார்ட் ஷாவின் ''பிக்மேலியன்'' என்ற நாடகம் ''மை ஃபேர் லேடி'' என்ற பெயரில் இசை நாடகமாக அரங்கேறிய நாள்.

பேராசிரியர் ஹென்றி ஹிக்கின்ஸாக நடிக்கும் நடிகர் ரெக்ஸ் ஹாரிஸனுக்கு இரண்டாவது காட்சியில் என்ன வசனம் பேசுவது என்று மறந்து விட்டது. இதைக் கண்டு கதாநாயகி எலிஸா இலிட்டிலாக நடித்த ஜூலி ஆண்ட்ரூஸ் மெதுவான குரலில் ரெக்ஸ் ஹாரிஸனுக்கு அவரது வசனங்களை நினைவுபடுத்தினார். அவர் மேலே பிடித்துக் கொண்டு விட்டார். அதன் விளைவாக ஷாவின் ''மை ஃபேர் லேடி'' பிராட்வேயின் வரலாற்றில் ஒரு புதிய சாதனையை ஏற்படுத்திவிட்டது! — 2717 நடவைகள் நிகழ்த்தப்பட்ட முதல் இசை நாடகம் இதுவே.



''மைஃபேர் லேடி''யில் ஆட்ரி ஹெப்பர்ன்

1964-ம் ஆண்டில் வார்னர் பிரதர்ஸ் என்ற திரைப்பட நிறுவனத்தின் அதிபர் ஜேக் வார்னர் 'லேடி'யைத் திரைப் படமாக்க முனைந்தார். நாடகத்தைத் திரைப்படமாக்கும் உரிமைக்கு மட்டும் சுமார் நாலரை கோடி ரூபாய்கள் கொடுத்தவர் என்ன காரணத்தாலோ ஜூலி ஆன்ட்ரூஸை கதாநாயகியாக ஒப்பந்தம் செய்யாமல் பிரபல நடிகை ஆட்ரி ஹெப்பர்னைப் போட்டார்.

இந்தச் சமயத்தில்தான் பிரபல தயாரிப்பாளரான காலஞ்சென்ற வால்ட் டிஸ்னி தாம் தயாரிக்க விருக்கும் ''மேரி பாப்பின்ஸ்'' என்ற திரைப்படத்தில் பிரதம பாகத்தில் நடிக்க ஜூலி ஆன்ட்ரூஸுக்குச் சந்தர்ப்பம் அளித்தார். ஜூலியின் சிறந்த நடிப்பாலும் இனிமையான பாடல்களாலும் ''மேரி பாப்பின்ஸ்'' மகத்தான வெற்றி பெற்றது.

'மேரி பாப்பின்'ஸின் மகத்தான வெற்றியைக் கண்ணுற்ற டுவென்டியத் செஞ்சுரி தங்களது தயாரிப்பான ''சவுண்ட் ஆப் மியூஸிக்''கில் ஜூலியை ஒப்பந்தம் செய்து கொண்டது. ஐந்து ''ஆஸ்கார்'' பரிசுகள் பெற்ற ''ஸவுண்ட் ஆப் மியூஸிக்'' பல நாடுகளில் பண வசூலில் புதிய சாதனைகளைத் தோற்றுவித்தது.

அது மட்டுமின்றி இசைத் தட்டுகள் விற்பனையிலும் ஜூலி ஆன்ட்ரூஸ் முன்னணியில் நிற்கிறார். அவர் 'சவுண்ட் ஆப் மியூஸி'க்குக்காகப் பாடிய பாடல்கள் 'ரிகார்ட்' விற்பனையில் ஒரு ரிகார்டை ஏற்படுத்தியுள்ளார்.

செயற்கைக் கிரகத்தில் பயணம் சென்ற அமெரிக்க விண்வெளி வீரர்களுக்கு என வெகு பிரத்தியேகமாக ஒலிபரப்பப்பட்ட பாடல் ஜூலி ஆன்ட்ரூஸ் 'ஸவுண்ட் ஆப் மியூஸிக்''கில் பாடிய ''டோ ரே மி'' என்ற பாடல்தான்!

— அ. இராமதுரை

''ஸவுண்ட் ஆப் மியூஸிக்''கில் ஜூலி ஆன்ட்ரூஸ்.



# ஆத்ம தாகம்

பநீப்ரியா

"அப்பா, நம் ஊர்க் கோயிலில் கும்பாபிஷேகமாம்..."

"எங்கே? எங்கே?" மூடிய விழிகளைத் திறந்து வினவினார் சுப்பிரமணிய குருக்கள். முதிர்ந்து இமைகள் தட்டிய விழிகளில் ஓர் ஒளி! "எப்போடா, சாமிநாதா, பேப்பரில் வந்திருக்கா?"

"அடுத்த மாதம் அப்பா. ஏன்? போக வேண்டுமென்று ஆசையா யிருக்கிறதா?"

குருக்கள் மௌனமானார். 'ஆசையா' என்று மகன் கேட்டு விட்டான்! அவனுக்கு அது அதிசயம், அலட்சியம்! ஆனால் அவருக்கு? கூட்டத்தில் மகாமகக் குளத்தில் கை நழுவிய பிள்ளை கிடைத்தது போல், கை விட்ட கணவன் மறுபடி நாயகியை ஏற்றது போல் ஓர் ஆனந்தம்!



" என்னப்பா, போவதானால் சொல்லுங்கள். இப்போதே 'ரிஸர்வேஷன்' ஏற்பாடு செய்யவேண்டும். ஆனால் உங்களுக்கு முடியுமா, அப்பா, இவ்வளவு தூரம் பிரயாணம் செய்ய?"? என்று கேட்டான் பிள்ளை.

"என்ன, முடியுமாவா? ஹூம்..." அலட்சியமாகச் சிரித்த சிரிப்பில் 'முடிவதும் முடிப்பதும் நாமா அவனுடா, அறியாத பயலே' என்ற பாவம் தொனித்தது.

"உங்கள் இஷ்டம் அப்பா. ஊரில் யாருக்காவது கடிதம் எழுத வேண்டுமா? இங்கு கோவிலில் அதுவரை யார் பொறுப்பு? ஒரு மாதமாவது ஆகாதா போய் வர?"

"ம்.... பார்ப்போம். உனக்குச் சிரமம், செலவு என்றால் வேண்டாம். என்னைப் பற்றி என்ன பறந்துவிடுவேன்...." அந்த இதயம் இப்போதே படபடத்தது. பறந்தது....தன் குழந்தையை வாரி அணைத்து உச்சி முகந்து கண்ணீரால் அபிஷேகித்தது, விழுந்தும், வணங்கியும், விம்மியும், மகிழ்ந்தும்—அவர் அப்போதே தன்னை மறந்தார்.... 'அப்பா முருகா! எனக்குக் கிடைக்காது என்று நினைத்த பாக்கியமடா, இது... எனக்காக நீ செய்யும் விளையாட்டா இது...' சுவரில் சாய்ந்த குருக்களின் கண்கள் தானே கசிந்தன. காற்றிலே ஒலியாகக் கலக்கவிடாத தொண்டைக் குழியின் கீழே அலை வீசிய எண்ணக் குமிழிகளுக்கு ஏற்ப அர்த ஒட்டிய மார்புக் கூட்டுக்குள் இருந்த சின்ன, சிறந்த இதயம் படபடத்தது.

"என்ன சுப்பு, ஊருக்குப் பயணமாமே! சாமி சொன்னான். என்ன திடீர்த் திட்டம்?" பக்கத்து வீட்டு ராமையரின் குரல்தான் குருக்களை எழுப்பியது. "இங்கு எப்படி ஏற்பாடு?"

"இங்கு என்ன... எத்தனையோ பேர்.... ஏற்பாடு செய்தாலாயிற்று" குருக்களுக்கு இருந்த பரபரப்பில் மீதி எல்லாமே அற்பமாகத் தோன்றியதோ....

"ஹூம்...குருக்களே! இத்தனை வயதாகியும் அஞ்ஞானம் விடவில்லையே! ஞானம் வரவில்லையே! அங்கிருக்கும் முருகன்தானே இங்கேயும்? அவனைத் தேடி அங்கேதான் செல்ல வேண்டுமா?" — ராமு சிரித்தார்.

"ராமு, ஆண்டவனை எஜமானனுகவும், நாயகனுகவும், சேவகனுகவும் நினைத்தவர்கள் உண்டு. ஆனால் என் முருகன்.... 'அவனை'... என் குழந்தை போலவும் பாவித்தேன்.

'இவனே'யும் அப்படித்தான் நினைக்கிறேன். ஆனால் தாய்க்கு ஊனக் குழந்தை மேல்தான் பாசம் அதிகம் இருக்கும். அதிலும் அக் குழந்தை திடீரென்று ஊனம் தெளிந்து நடமாடினாலோ அப்போது இயற்கையாக விளையாடும் குழந்தையை விட ஆனந்தம் அதிகமாகத்தான் இருக்கும்...''

''அதனால்....?''

''ராமு, நான் என் முருகனையே வாழ்க்கையாக, அவன் சேவையே மோக்ஷமாகக் கொண்டிருந்தேன். ஐந்து வயதில் ஐயனுக்குச் சந்தனம் அரைத்து, பஞ்சாமிர்தம் செய்து, அர்ச்சனை புஷ்பங்களுக்குக் காம்பு ஆய்ந்து என் தொண்டை ஆரம்பித்தேன். அவன் தயவால் என் வாழ்வு மலர்ந்தது. நானும் மகிழ்ந்தேன். ஆனால்...ஆனால்... அதில் ஒரு சாட்டை அடியாக...சே!'' அதை இன்று நினைக்கக்கூட விரும்பாதவர் போல் அவர் முகம் சுளித்தார்.

ராமு மௌனமாக இருந்தார். அவருக்கு இது புது விஷயமல்ல. பலமுறை சுப்பு குருக்கள், ஆற்றாமை தீர, அரற்றிக் கேட்டுச் சலித்த கதைதான். ஆனால் அதன் ஆழம், புனிதம் எத்தனை என்பதை அறிந்த அவர் குருக்களைப் பரிகசிக்கவில்லை. ராமாயணமும் பாரதமும் தெரியாத கதையா? ஆனால் அதை மறுபடி மறுபடி கேட்கக் கேட்க அலுப்

பின் எந்த வெளி நாகரிகமும் நம் மதத்தை அழிக்க முடியாது.... செய்வாயா?'' மரணப் படுக்கையிலிருந்த அருணஜடைக் குருக்கள் மகன் கையைப் பிடித்துச் சத்தியம் வாங்கிக் கொண்டபோது சுப்பிரமணியத்துக்கு வயது இருபது. அடுத்த அரை மணியில் ஒரு ஜோதி ஆண்டவன் பாதத்தில் ஐக்கியமாயிற்று.

அன்று முதல் அந்தப் பால குருநாதனின் சேவையே தன் மூச்சாக நின்ற சுப்பிரமணிய குருக்களுக்குத்தான் அதில் எத்தனை ஆர்வம்? வெறும் தொழிலாகவா, கடமை உணர்ச்சியினால் உந்தப்பட்டவராகவா அவர் அதைச் செய்தார்! அவர் முருகனுடனேயே ஒன்று பட்டார். சிறு குழந்தையைப் போல அவர் அந்தப் பிம்பத்தை எண்ணெய் தடவித் தடவிக் குளிப்பாட்டும்போது அதை ஒரு சிலையாகவா நினைத்தார்? அதற்குப் பாலும், சந்தனமும் அபிஷேகம் செய்த போது அவர் மனம் குளிர்ந்தது. பஞ்சாமிர்தத்தைப் பக்குவமாகக் கலந்து ஊட்டும் போது அதில் எத்தனை பக்தி சிரத்தை... அலங்காரக் கோலம்தான் என்ன? சந்தனக் காப்பிடும்போதும், அரச வேஷம் போட்டு அழகு பார்ப்பதும், 'அவனை' ஆண்டியாக்கித் தானே எல்லாவற்றையும் துறந்தவராக அவர் 'அவன்' பாதத்தில் விழுவதும், அப்பப்பா! ஆத்மார்த்த பூஜை அது.



பதில்லே. அதுபோலத்தான் குருக்களின் கசப்பான அனுபவத்தில் விளைந்த தெய்விக ஏக்கத்தையும் மதித்தார் ராமையர்.

குருக்களும் பேசவில்லை.

அங்கு இடையில் தோன்றிய மௌனத் திரையில் இருவர் மனங்களுக்கும் மட்டும் புரியும்படி ஓடியது அந்த நிகழ்ச்சி. ஒருவர் சொல்லாமல் மௌனமாகச் சொல்ல, இன்னொருவர் மௌனமாகவே அதைப் புரிந்து கொண்டார்.

''சுப்பிரமணியா, நான்கு தலைமுறையாகக் குமரன் கோயில் பணி நம் வம்சத்தினுடையதாகி விட்டது. அதை நீ தவற விடாதே. உன் வம்சத்தில் ஒரு பிள்ளையை ஆண்டவன் பணிக்கென்று அர்ப்பணித்து விடு. கிருகஸ்தர்கள் வேதாத்யயனத்திற்கு என்றும், நம் போன்றவர்கள் ஆண்டவன் பணிக்கு என்றும் ஒரு மகனை விட்டுவிட்டால்

திருமணக் கோலத்தில் அவனை அலங்கரித்தால் உலகமெலாம் சுபிட்சமடைவதாக ஆனந்தப்படுவார். சாமிநாதனாக அலங்கரித்து அவர் ஆனந்தப்படுவார். தம் மூத்த மகன் சிவகுமாரனை அவர் தம் வழியிலேயே பழக்கினார். ஐந்து வயதில் அவர் செய்த தொண்டுகளை அவனும் ஏற்றான். 'என் முருகன் எனக்குப் பின் தனக்கு ஒரு தொண்டனைத் தேடிக் கொண்டு, என் சத்தியத்தையும் காத்து விட்டான்' என்றே அநுதினமும் முருகனை வணங்கினார் சுப்பிரமணிய குருக்கள்.

புத்தாண்டு பிறந்தது. ஆனால் அந்த ஆண்டு பிறந்த வேளையோ என்னமோ! ''யான் செய்த குற்றமென்ன முருகா, குமரா...'' என்று சுப்பிரமணியக் குருக்களை அழவைத்தது அவ்வாண்டு. அவரது பணிக்கு ஒரு தடை வந்தது.

அந்த வருடம் ஆடிக் கிருத்திகை உற்சவம் நெருங்கிக் கொண்டிருந்தது. வழக்கம்போல்



செந்தில் வாழ் நாதனை, குன்றுதொறும் குமரனை, உற்சவமூர்த்தியாக்க ஏற்பாடுகளைத் தொடங்கினார் சுப்பிரமணிய குருக்கள். ஒரு கோயில் விழா என்றால் அது இறைவனுக்கும் பக்தனுக்கும் குருக்களுக்கும் மட்டும் மகிழ்வூட்டும் வைபவம் மட்டுமா? அதை ஒட்டிப் பிழைப்பவர் எத்தனை பேர்? பூ, பழம், தேங்காய் வியாபாரிகள் தவிர, பந்தல்காரன், திருவிழாக் கடைக்காரன், மிட்டாய்க்காரன் என்று கூட்டத்தின் தரத்திற்கேற்ப எத்தனை பேருக்குப் பிழைப்பு நடக்கிறது! முதியோர்களும் இளைஞர்களும் சிறுவர்களும் தத்தம் பருவத்துக்கு ஏற்ப எப்படியெல்லாம் ஆனந்தத்தை அனுபவிக்கின்றனர்!

ஊர் விட்டு ஊர் வந்து, திருவிழா நான்காம் நாள், ஐந்தாம் நாள், தேர் என்று கூடும் மக்களின் ஆரவார மகிழ்ச்சிக்கு எல்லை ஏது? தன் முயற்சியால் உருவாகும் கோலாகல விழாவுக்குக் கோலக் குமரனைப் பொறுப்பாக்கிவிட்டு வழக்கம் போல் சுப்பிரமணிய குருக்கள் தன் முயற்சிகளை ஆரம்பித்தார். அது ஏற்கனவே பஞ்சாயத்துத் தலைவர் தேர்தல் முடிந்து சிறு சலசலப்பு ஏற்பட்டு அடங்கி யிருந்த சமயம். சில மாதங்கள் முன் கிராம ஆட்சியில் ஏற்பட்டுவிட்ட எந்த மாறுதலும் குழப்பமும் ஆண்டவனுக்கு அப்பாற்பட்டவை, அணுக முடியாதவை என்று விட்டு விட்ட குருக்களுக்கு அதிர்ச்சி அது.

அன்று புதிய பஞ்சாயத்துத் தலைவர் அழைத்துக் கூறிவிட்டார் சுட்ட வட்டமாக. "குருக்களையா, உங்ககிட்ட எங்களுக்கு மதிப்பு உண்டு. ஆனால் நாங்கள் பொது ஜனங்க அபிப்பிராயத்தை, அதுக்கு மேலே மதிக்க வேண்டியவங்க! கோவில் தேர், திரு திருவிழான்னு செலவு அனாவசியம்னு, பழைய மூடப் பழக்கம்னு சிலபேர் நினைக்கிறாங்க .." அவரே கூறத் துணியத்தான் இல்லை. அறிவு சற்று அடினாலும் அந்தரங்கம் பேச விடவில்லை. ஆனால் ஆட்டம் போடும் பீடம் பேசச் செய்து விட்டது அவரை!

"என்ன, என்ன சொல்றீங்க..." குருக்கள் புரியாமல் விழித்தார்.

"குருக்களையா, இரண்டு மூன்று வருடமா ஜனங்களுக்கு இந்தக் கோயில் பூசை எல்லாம் பிடிக்கலே. அதில் இந்த வருஷம் ரொம்ப உறுதியா யிருக்கிறாங்க! 'தெருவிலே சாமி புறப்படுமான்னு பாக்கறோம்' 'தெருவோட விடுவோமா'ன்னு கட்சி கட்டறாங்க சிலபேர். அதனாலே...." மறுபடி தயக்கம்.

"என்ன, ஆண்டவனுக்கு அரசாங்கத்தின் தடையா?"

"தப்பு... அரசாங்கம்னு இழுக்காதீங்க... பெரிய இடம் அது. ஆனால் மக்கள் எண்ணத்தைச் சொல்லிப் போட்டேன். பின்னால் அடிதடி குழப்பம்னு வரப்படாது பாருங்க."

"முருகா, முருகா....." என்று அலறிக் கொண்டு ஓடினார் குருக்கள். 'அவன்' காலில் விழுந்தார்.

நாம் செய்துவிட்ட ஏதோ ஒரு தவறுதான் இப்படி ஊரைச் சூழ்ந்ததோ என்று உருகினார். தன் குழந்தையின் தவறுகளை மன்னிக்கும் தந்தை போல லோகபிதாவான நீ உன் குழந்தையின் தவறுகளை மன்னிப்பாயாக' என்று கதறினார். ஏன் இந்தக் குழப்பம்? ஊருக்கு என்ன கேடு வருமோ என்று நடுங்கினார். குருக்களும் விடாது எங்கெங்கோ பெரிய மனிதர்கள், அரசாங்க அதிகாரிகளைக் கண்டு எல்லாம் பார்த்தார். ஆனால் அவர் நினைத்தபடி அடுத்த பக்ஷத்தில்கூட அவரால் கோவில் உற்சவத்தை நடத்த முடியவில்லை. குருக்களின் நெஞ்சு வெடித்து விம்மியது. சே...

அத்துடனில்லை. கடைசியாக அவர் பொறுமைக்கு ஒரு முத்தாய்ப்பாக வாய்த்தது அவர் மகன் சிவகுமாருக்கு ஏற்பட்ட ஆபத்து, அவமானம். அது நடந்தது மறு வருடம். அதற்குள்ளேயே கோயில் நிர்வாகத்தில் பல இடையூறுகளைக் கண்டார் குருக்கள். தங்களுக்குப் படியளக்கும் ஆண்டவனுக்கே தாங்கள் படியளந்ததாக நினைத்தனர் சிலர். மறு வருடம் எப்படியாவது கோவிலுக்குள்ளேயாவது — சுவாமி புறப்பாடு செய்துவிட வேண்டும் என்று வாலிபனான சிவகுமார் முன்நின்றான். இளரத்தம் அல்லவா? ஆனால் அப்போதும் நடந்ததென்ன? சிலர் அவனுக்குத் துணையும் நின்றனர். ஆனால் ஊரை இரண்டுபடுத்தி அநாவசியக் குழப்பம் விளைவிக்க முயன்றதாகப் போலீஸ் சிவகுமாரைக் கைது செய்தது.

இடையே கோவில் கட்டளைக்கு வேறு ஒருவர் போட்டி இட்டார்.

குருக்கள் கடைசி முறையாகக் கோவில் சாவியைத் தர்மகர்த்தாவின் கையில் வீசி விட்டு, "முருகா, உன்னையும் என்னையும் அநாதை ஆக்கிவிட்டாயே! இது என்ன விளையாட்டு.....?" என்று கொடி மரத்துக்கு வெளியே வாய்விட்டுக் கதறிய போது அந்த முருகனே கண்ணீர் விட்டிருப்பான்!

"சாப்பு, நீ இங்கு இந்தக் கோயிலுக்கு வந்து ஏழெட்டு வருஷம் இருக்குமா....?" ராமையர்தாம் மௌனத்தைக் கலைத்தார்.

"மேலேயே இருக்கும். நடுவில் ஓரிரண்டு வருஷங்கள் நினைவில்லாமல் இருந்தேன். அதற்குள் வடக்கே வேலைக்கு வந்தான் சாமிநாதன். கோவில் வேலை இங்கு அப்போதுதான் ஆரம்பமாகி யிருந்தது. கர்ப்பத்தில் சிசு வளர்வதுபோல் கொஞ்சம் கொஞ்ச




தன்னிகரில்லாச் சிறப்பு! கண்ணைப் பறிக்கும் வெளுப்பு! துப்புரவான தூய்மை! எல்லாம் ஸர்ப் செயல், எல்லைமீறிய வல்லமை. கரைகடந்த நுரைவளம். சலவையே வெகு எளிது. ஆம், சிறுவர் உடை முதல், சட்டை, சேலைவரை எல்லாத் துணிகளையும் கைப்பட வீட்டிலேயே சலவை செய்துகொள்ளச் சாலச் சிறந்தது ஸர்ப்!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

S.U. 45-140 TM

# கேசம் உதிருகிறதே என்ற கவலையா?



## இன்றே ஸில்விக்ரின் உபயோகிக்கத் தொடங்கி உங்கள் கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்

**இந்த அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்.**

கேச உதிர்வு. உச்சந்தலையிலே தினவு. கார்போல் வரண்ட உரோமம். உங்கள் கேசத்திற்கு உகந்த ஊட்டமில்லை என்பதற்கான அறிகுறிகள் இவை. ஊட்டமின்மைதான் இளமையிலேயே வழுக்கை விழக் காரணமாகிறது. அந்த ஊட்டமின்மைக்கு உரிய நிவாரணம் ஸில்விக்ரின்—கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

**ஸில்விக்ரின் எப்படி வேலை செய்கிறது.**

18 அமினோ-அமிலங்களை உங்கள் கேசத்திற்கு உணவாக அளிக்கிறது இயற்கை. இந்த அமினோ—அமிலங்கள் எல்லாமே அடர்வாக ஒன்று சேர்ந்த வடிவில் கிடைக்கச் செய்வது ஸில்விக்ரின் ஒன்றே. அது வேகமுடன் மயிர்க்கால்களை ஊடுருவி, ஊட்டமளித்து உரமேற்றி, பாங்கான கேச வளர்ச்சியை ஊக்குவிக்கும்.

**உபயோக விதிமுறைகள்:**

உங்கள் உச்சந்தலைமீது அன்றாடம் இரு நிமிட நேரம் ப்யூர் ஸில்விக்ரின் தேய்த்திடுங்கள். கேச நிலை அபிவிருத்தி அடையும் வரை உபயோகியுங்கள் ப்யூர் ஸில்விக்ரின். கேச நலம் மீண்டு விட்டதென்றால் அதன் பின் கேச நலனைக் காத்துக் கொள்ளத் துணை புரிவது ஸில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்-ப்யூர் ஸில்விக்ரின் அடங்கிய, எண்ணெய் அடிப்படை கொண்ட லோஷன்.

ஆல் அபௌட் ஹேர் (All About Hair) என்ற புத்தகத்தின் இலவசப் பிரதியைப் பெற, எழுதுங்கள்: டிபார்ட்மெண்ட் K-1, தபால் பெட்டி 727, பம்பாய்-1.




ஸில்விக்ரின் தயாரிப்புகள்—ஆடவர், பெண்டிர் யாவரும் உபயோகிக்கத் தக்கவை.

**ஸில்விக்ரின்**

கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

LPE-Aiyars S. I TAM

மாக என் அறிவும் தனிந்தது. இதுவும் முருகன் சந்நிதி என்பதைவிட 'முருகனை ஜனங்கள் மறக்கவில்லை, மறக்க முடியாது. பக்தி பெருகிக் கொண்டுதான் இருக்கிறது. சூரியனைக் கைக் குடை மறைத்து விடாது' என்ற எண்ணமே எனக்கு மகிழ்வூட்டியது. கும்பாபிஷேகம் ஆயிற்று. முதலில் யாரோ ஒரு குருக்கள் வந்தார்..... அவருக்கு இவ்வூர் ஒத்துக் கொள்ளவில்லை. எனக்கு அதிர்ஷ்டம் கிடைத்தது.....''

''பின் மறுபடி ஏன் அஞ்ஞானம் கட்டி இழுக்கிறது?... சொந்த ஊரிலே என்ன இருக்கு.....?''

ராமு கண்களை ஒரு முறை மூடித் திறந்தார். இந்த வயதிலும் கிழவரைக் கட்டி இழுப்பது மண் என்ற பாசமா? அவமானப்பட்ட இடம் என்றில்லாது அழைப்பது ஆட்கொண்டவன் குரலா?....

''ராமு, உலகப் போக்கு ஒரு சைக்கிள் போல. இடிந்து விழுந்து பாம்புப் புற்றுவிட்ட கோயில் இப்படி ஜகஜ்ஜோதியாகும் என்று நினைத்தேனா? எங்கே இருந்து, உண்டு, உறங்கி சேவை செய்தாலும் என் உயிரெல்லாம் இருந்தது அங்கு! தீராத தாகமாக என்னை வாட்டிய ஏக்கம் தீருகிறது. நான் அவனுக்கு ஊற்றிய பாலும் சந்தனமும் என் நெஞ்சைக் குளிர்வித்து விட்டன..... என் ஆசை தீர அவனை இன்னொரு முறை தரிசித்து என் கையால் ஒரு மலரை எடுத்து என் நெஞ்சார அவனுக்கு அர்ச்சித்து விட்டால், ராமு, எனக்கினி வேறேதும் வேண்டாம்.'' குருக்கள் மெய்ம்மறந்து பேசினார்.

''அதோ.... அதோ....!'' பல ஜோடி விழிகள் கோபுரத்தின் உச்சியை அண்ணாந்து நோக்கின. அதோ.... பெரியவர்கள் மங்கள வாத்தியம் முழங்க மங்கல நீரை கடத்திலிருந்து கலசத்துக்கு வர்ஷிக்கின்றனர். ''ஓம்..... ஓம்!'' என்ற நாதம் முழங்குகிறது, ஆலயமணியில். ''அரோகரா..... அரோகரா...'' பக்த கோஷம் முழங்குகிறது.

கம்பை ஊன்றிக் கொண்டு தள்ளாடித் தள்ளாடி வருகிறவர்.... அவர்தான் சுப்பிரமணிய குருக்கள் என்று யாரும் கூறத் தேவையில்லை. அவர் உள் மனம், ''முருகா! குகா....! ஷண்முகா! என்றே நானுனை....'' என்று ஏதோ கீதமிசைக்கிறது. அது தாளத்துக்குக் கட்டுப்பட்ட இசையல்ல. பக்திக்கும் பரவசத்துக்கும் பிறப்பிடமானது அது!

பார்வை யெல்லாம் அவன் தரிசனத்துக்கும், காதுகள் அவன் புகழ் கேட்கவும், வாய் அவன் இசை பாடவும், கைகள் அவன் சேவைக்கும், உடல் அவன் தொண்டுக்கும், சர்வாங்கமும் அவனுக்காக என்றே இருந்தும் அர்ப்பணிக்க இயலாது இதுவரை முடமாகிக் கிடந்த குருக்களின் உடல் திடீரென்று பலம் அடைந்தது; முழுமை பெற்றது.

''அவர்தான் கட்டளைக் குருக்கள்....'' கூட்டத்தில் யாரோ யாரையோ சுட்டிக் காட்டினார்.

கண்களை இடுக்கிக் கொண்டு பார்த்தார் சுப்பிரமணிய குருக்கள். பார்வையை ஆனந்தக் கண்ணீர் மறைக்கிறது.



'' என் அம்மாவும் என் மனைவியும் ஒரு விஷயத்தில் மகா ஒற்றுமை.''

'' அப்படியா! அதிசயமாயிருக்கே?''

'' சண்டை போட ஆரம்பித்தால் இருவரும் ஓயமாட்டார்கள்!''

---

''ம்... தலைவர் சிங்காரமும், கோஷ்டியும் இட்ட விஷவித்து முளைத்து மரமாகி ஊரை விஷக் காற்றுக்கியது. அதற்கு இன்றுதான் விடிமோக்ஷம். இன்றைய ஓமப் புகையும், வேத ஒலியும், எரியும் கர்ப்பூரத்தின் மணமும் அந்தத் துர்த்தேவதைகளை ஓட்ட வேண்டும். ம்.... சுப்பிரமணிய குருக்கள் இல்லையே என்றிருக்கிறது இப்போது......''

''பாவம், அவர் எங்காவது தெய்வமாக வாவது இன்று ஆகாய மார்க்கத்தில் வந்து நம்மை வாழ்த்தும் முப்பத்து முக்கோடி தேவர்களுடன் நின்று கொண்டுதான் இருப்பார்.'' — இரு கிழங்கள் பேசிக் கொண்டன.

குருக்கள் ஒருகணம் திடுக்கிட்டார். ''ஐயோ, நான் தேவனாக இல்லை! ஆனால், அதற்கும் மேல் உடலுடனேயே மோக்ஷம் பெற்ற ஆனந்தானுபவத்தில் இதோ இங்கு தான் இருக்கிறேன், உங்களுடன் ஒருவனாக'' என்று கூவவேண்டும்போல் இருந்தது குருக்களுக்கு. அதற்குள் கூட்டம் அவரை நெட்டித் தள்ளியது.

இதோ குடைராட்டினம்—குழந்தைகளின் கும்மாள பூமி; வளையல், பூக்கடைகள் துணிக் கடைகள், வனிதையர் வட்டமிடும் இடம்; வேறு எத்தனையோ வியாபாரிகள். வண்ண விளக்குகள்! புகைப்பட நிபுணர், பத்திரிகை நிருபர், ரேடியோ வர்ணனை, அஞ்சல் நிலையத்தார்... அப்பா, முன்னைவிட இப்போது கோவில் விழாக்களில் பிழைப்பவர் அதிகம் தான்! ஆண்டவனே, இதில் மகிழ்ச்சி உனக்கு மட்டுமா? இதோ, இங்கு வளையவரும் ஒவ்வோர் உயிரும் ஒரு வகையில் மகிழ்கின்றது.

''சிங்காரத்தைப் பற்றிச் சொன்னாயே, அவன் இப்போது ரொம்ப மாறி விட்டான் தெரியுமா? ஆனால் கோவில் வாசலில் விழுந்து










கும்பிடத்தான் உடம்பில்லை! தென்பிருந்த வரை ஆட்டம் போட்ட உடல் இப்போது ஆடி அடங்கி விட்டது. கண் பார்வையில்லை. கையும் காலும் வேறு குழைந்து கூழை பாய்ந்து...அப்பப்பா...கண்றாவி..."

"ஆமாம்..... நல்லவர்கள் வயிற்றெரிச்சல் விணாகுமா? சாபம் விடுமா....?" பழைய கிழங்கள் குப்பையைக் கிளறின.

"ஐயோ..... அப்படியா?" குருக்கள் ஒரு கணம் பதறினார்.

இதற்குள் தன் பிரயாசை இன்றியே எப்படியோ கூட்டம் அவரைக் கர்ப்பக் கிருகத்துக்குள் தள்ளிவிட்டது.

குருக்கள் கண்களைப் பரக்க விழித்துப் பார்த்தார். அதோ, முருகனின் சின்னம்! பூப்போன்ற உடல். அவர் அதை சிறு குழந்தை போலத் தொட்டுத் தடவி எண்ணெய் பூசுகிறார்; பாலை நிதானமாக ஊற்றி அபிஷேகம் செய்கிறார்; வாசனைச் சந்தனக் கலவையைப் பூசுகிறார். பஞ்சாமிர்தத்தைப் பக்குவமாகக் கலக்கிறார். பாலன், குமரன், அரசன், ஆண்டி என்று நான்கு கோலத்தையும் பூட்டி அழகு பார்க்கிறார். மனித வாழ்வின் மாற்றங்களை, நிலையில்லாமையை, சைக்கிள் போன்ற சுழற்சித் தத்துவத்தை அந்த விதம் விதமான அலங்காரங்கள் எடுத்துக் காட்டுகின்றன. ஆனால் வெளித் தோற்றம் தான் மாற்றமே தவிர, எதற்கும் மூலவராக அசையாத சிலையாகத் தெய்விகக் கோலத்துடன் சிறு குழந்தையாக நிற்கிறான் குழந்தை முருகன்.

"நான் சீவிக் குழல் முடித்து, மையெழுதி, பொட்டிட்டுச் சின்னக் கன்னத்தைக் கிள்ளி விட்ட சிறு முருகனா நீ.... இன்று இருமாதர் புடைசூழ இலகும் மயில் வாகனனான இளவீரனல்லவா நீ?" என்று எண்ணிப் பூரிக்கிறார் குருக்கள்.

ஆண்டவன் இருக்கிறானா இல்லையா என்று கேட்கும் மனிதன் இல்லாமல் போகலாம். ஆனால் ஆண்டவன் அழிவதில்லை. அவன் கொஞ்ச நாள் மனிதனை விளையாட விட்டு விட்டு நின்றிருக்கிறான்.... தமக்குள் தேறுகிறார் குருக்கள்.

நிமிர்ந்து நடந்து செல்கிறாரே, அவர் தான் சுப்பிரமணிய குருக்கள். கொடிமரத்தடியில் அவர் உடல் பூமியில் பதிந்து புரண்டு வணங்குகிறது. யாரும் சிரிக்கவில்லை. அவரைப் பார்த்து அருகில் நின்ற சில சிறுவர்களும் வணங்குகிறார்கள்!

"டேய்.... நான் இரண்டு வருசம் முன் லீவுக்கு வந்த போது இருட்டாயிருந்த கோயில் எப்படி ஆயிடுத்துடா.... பளபளன்னு....?" ஒரு குழந்தையின் குரல் இது.

"மகனே, இருட்டு கோயிலில் இல்லை! அங்கிருப்பது ஜோதி! இருள் இருந்தது மனிதர் மனத்தில்தான். அது விலகிவிட்டது. ஆனால் மறுபடி ஒளி மங்கி இருள் வந்து வீட்டையும், நாட்டையும் சூழாதிருக்க இங்குள்ள ஒளி குன்றாமல் காப்பது வருங்கால மன்னர்களான உங்கள் பொறுப்படா...." அன்றிட்ட சாபத்தின் மறுப்பு போலக் கொடிமரத்தின் கீழ் நின்ற குருக்கள் குழந்தைகளை வாழ்த்தினார். ஆலயமணி முழங்கிற்று! முருகன் முறுவலித்தான்!



சென்னை 60வது வட்டத்திலுள்ள திரு வி. க. பூங்காவில் 26-8-67 அன்று திரு. வி. க வின் மார்பளவுச் சிலையை மேயர் தலைமையில் கல்வியமைச்சர் அவர்கள் திறந்து வைத்தார்கள். இதற்குப் பல ஆண்டுகளாகப் பெருமுயற்சி எடுத்தவர் அவ்வட்ட நகரமன்ற உறுப்பினர் கோ. இளவரசு அவர்கள்.

பம்பாய், நேஷனல் அட்வர்டைசிங் சர்விசின் மானேஜிங் டைரக்டர் திரு ஹரீஷ்-வீ. ஜெயின் அவர்கள் 1967-68ம் ஆண்டுக்கு ஆடிட்பீரோ ஆப் சர்டிபிகேட் நிறுவனத்தின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளார்.





திருவல்லிக்கேணி திருப்புகழ் சபையின் பதினோராவது ஆண்டு விழா சென்ற மாதம் பார்த்தசாரதி ஸ்வாமி கோயில் நாலுகால் மண்டபத்தில் சிறப்பாக நடைபெற்றது. திரு கி. வா. ஜ. பஜனை ஊர்வலத்தைத் தொடங்கி வைத்தார்.

வங்கத் தமிழர் சங்கத்தில் தமிழக முதல்வர் அண்ணாவின் 59 வது பிறந்த தினத்தை வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள்.



# கல்லுக்குள் ஈரம்

ர. சு. நல்லபெருமாள்

## அத்தியாயம் 41

## நீயா என் எதிரி?

ரங்கமணியின் வாயிலிருந்து இப்படி ஒரு சொல் வரும் என்று யாராவது எதிர்ப்பார்த்திருந்தால் தானே!

என்ன! கமலவாசகியைக் கடத்துவதா?'' என்று வியப்போடு கேட்டான் முத்து.

''அவளும் ஓர் இந்தியப் பெண் தானே? நம்மையே நாம் அடித்துக் கொள்வது மாதிரி தான் அவளைக்கடத்தி விடுவது'' என்றான் ஹிட்லர் மீசை நாகலிங்கம்.

''சிவானந்தம் உனக்கு நண்பனாயிற்றே. அப்படி இருந்துமா இந்த முடிவுக்கு வந்திருக்கிறாய்?'' என்று வியப்புடன் கேட்டான் காசிலிங்கம்.

''நம்முடைய வீட்டுப் பாம்பு என்பதற்காக அடிக்காமல் விட்டுவிட முடியுமா?'' என்றான் ரங்கமணி.

''இந்தச் சமயத்தில் அவளை ஒடுக்கவில்லை என்றால் நமக்கு ஆபத்துத்தான். ஒரு சமயம் ஜில்லா போலீஸ் அதிகாரியிடம்கூட அவள் சர்தாரைப் பற்றித்தான் சொன்னான்'' என்றான் வடிவேலு.

''என்ன சொன்னான்?'' என்று பரபரப்புடன் கேட்டான் காசிலிங்கம்.

'''சர்தார் கதர் உடுத்தாவிட்டாலும் அரசாங்கத்துக்கு எதிராக உள்ளவர் தாம்; திரிவேணிக்குச் சர்தாரின் பக்கபலம் இருக்கிறது. அதனால்தான் அவளுக்கு அவ்வளவு துணிவு. ஒருநாளைக்குத் திடீரென்று சுயேச்சை அச்சாபீஸைச் சோதனையிட்டால் எல்லாம் தெரிந்து விடும்' என்றான். போலீஸ் இலாகாவில் அவன் சொல்லுக்கு நல்ல மதிப்பு இருக்கிறது. சிவானந்தத்தை விட அவள்தான் அடக்குமுறைகளில் கைதேர்ந்தவள் என்பது அதிகாரியின் எண்ணம். அவளை வெளியே விட்டு வைத்திருந்தால் நமக்கும் சங்கடந்தான்'' என்றான் வடிவேலு.

''திருநெல்வேலித் தெருவில் இரண்டு உயிர்களைப் பழி வாங்கியதற்காகவாவது அவள் மீது பழி தீர்த்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் மக்களுக்குத் திருப்தி ஏற்படும்'' என்றான் ரங்கமணி.






எல்லாரும் சர்தாரைப் பார்த்தார்கள். அவர் சொன்னார் :

''அடுத்த மாதம் ஒரு பெரிய சாதனையில் நாம் எல்லாரும் ஈடுபட வேண்டியிருக்கிறது. டெபுடியின் மனைவி வெளியே இருக்கும் வரை நமக்கு ஆபத்துதான். அவளுடைய நச்சரிப்பு பொறுக்காமல் சிவானந்தம் நம்முடைய அச்சாபீஸைச் சோதனையிட வந்தாலும் ஆபத்துதான். அவளைக் கடத்தி வந்துவிட வேண்டியதுதான். பம்பாய்க்குக் கடத்திச் சென்று விடலாம்.''

''அடுத்த மாதம் என்ன காரியம் நடத்த வேண்டும்?'' என்று குறுக்கிட்டுக் கேட்டான் மாணிக்கம்.

''இட்டத்தட்ட அறுநூறு ஆங்கிலேயச் சிப்பாய்களைக் கொன்று குவிக்கும் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது'' என்றார் சர்தார்.

எல்லாரும் மகிழ்ச்சிப் பெருக்கால் ஆரவாரம் செய்தார்கள்.

''அதில் வெற்றி கிடைத்து விட்டால், ஆங்கில ஆட்சி அதிர்ந்துவிடும். இந்தியாவி லிருக்கும் ஒவ்வொரு வெள்ளைக்காரனும் பீதியினால் நடுங்கிக் கொண்டிருப்பான். இன்னும் இது பற்றி முழு விவரம் வர வில்லை. அடுத்த வாரம் இரகசிய ரேடியோ ஒலிபரப்பு மூலம் பம்பாயிலிருந்து முழுத் தகவல் கிடைக்கும். அதுவரை பொறுத் திருங்கள். இப்போது கமலாவைப் பற்றி முடிவு செய்வோம்'' என்றார் சர்தார்.

''அவளைக் கடத்தி வந்து என்ன செய் வது?'' என்று கேட்டான் முத்து.

''பம்பாய்க்கு அனுப்பி விடலாம். தேவிகா இப்போது பம்பாயில் இருக்கிறாள். அவ ளிடம் ஒப்படைத்து விட்டால் அவள் பத்திர மாகப் பார்த்துக் கொள்வாள். கமலா தப்பி ஓடிவிடவும் முடியாது. பிறகு நிலைமை மாறினால் அல்லது சிவானந்தம் மாற்றலாகி வேறு ஊருக்குப் போய் விட்டால் அவளை அவ னிடம் சேர்த்துவிடலாம்'' என்றார் சர்தார்.

''ஒரு பெண்ணைக் கடத்தினால் ஜனங்கள் தூற்றுவார்களே?'' என்றான் முத்து.

''இன்றைய சூழ்நிலையில் ஜனங்கள் இதை வரவேற்பார்கள். கமலாவின் தூண்டுத லால்தான் துப்பாக்கிச் சூடு நடந்து இரண்டு பேர்கள் இறந்தார்கள் என்பது எல்லாருக் கும் தெரியும். அவளைக் கடத்திவிட்டால் அன்று நடந்த சம்பவத்துக்குப் பழிவாங்கி விட்டார்கள் என்று ஜனங்கள் திருப்தி யடைவார்கள்'' என்றார் சர்தார். பிறகு சுற்றுமுற்றும் பார்த்தார். எல்லாரும் அவ ரையே கவனமாகப் பார்த்துக் கொண்டிருந் தார்கள்.

''அவளைக் கடத்துவது யார் என்பது பற்றிச் சீட்டுப் போட்டு முடிவு செய்யப் போகிறீர்களா? அல்லது நானே நியமிக்கட் டுமா?'' என்று கேட்டார்.

''நீங்களே சொல்லி விடுங்கள்'' என்றான் மாணிக்கம். மற்றவர்களும் அதற்குத் தலை யசைத்தார்கள்.

''சரி, இந்த வேலையை வடிவேலும், ரங்கமணியும் காசிலிங்கமும் சேர்ந்து செய்து முடிக்கட்டும். இந்தக் குழுவுக்கு ரங்கமணி தலைமை வகிப்பான். காரியம் பத்து நாட் களுக்குள் முடிய வேண்டும்'' என்றார் சர்தார். இதைக் கேட்டு ரங்கமணி உற்சாகமடைந் தான். அவனுள் பரபரப்புத் தோன்றியது. சந்தோஷத்துடன் பக்கத்திலிருந்த முத்து வின் முதுகில் ஓங்கி ஓர் அடி வைத்தான். வலியால் முதுகை நெளித்தான் முத்து.

''அவளுடைய உயிருக்கு எக்காரணம் கொண்டும் ஆபத்து நேர்ந்துவிடக் கூடாது. அவளை உயிரோடுதான் கொண்டு வரவேண் டும். இது மிகவும் முக்கியம். இந்த முயற்சி யில் வேறு யாரையாவது கொன்றுதானாக வேண்டும் என்ற நிர்ப்பந்தம் வந்தால் அப் படியே செய்து கொள்ளுங்கள். ஆனால் அவ ளுக்கோ சிவானந்தத்துக்கோ எவ்வித ஆபத் தும் நேர்ந்துவிடக் கூடாது'' என்றார் சர்தார் கண்டிப்புடன்.

இரவு அந்த இரகசியக் கூட்டம் முடியும் போது மணி இரண்டாகி விட்டது.

ரங்கமணி பல நினைவுகளை உள்ளத்தில் சுழலவிட்டுக் கொண்டு அச்சகத்தில் படுத் திருந்தான். அதிகாலை வரை அவனுக்குத் தூக்கமே வரவில்லை. சூரியோதய சமயத்தில் தான் தூங்கத் தொடங்கினான். அன்று அச்சகத்துக்கு விடுமுறை நாளானதால் கவலை யின்றித் தூங்கினான்.

அப்போதுதான் மழை பெய்து ஓய்ந் திருந்தது. எங்கு பார்த்தாலும் ஒரு குளிர்ச்சி, பளபளப்பு, ஈர மண்ணின் வாசனை. குளித்து விட்டு வரும் பெண்ணின் கேசத்திலிருந்து தண்ணீர் சொட்டுவது மாதிரி, மரங்களி லிருந்து இன்னும் மழைத் துளிகள் சொட்டிக் கொண்டிருந்தன. காசுகளை அள்ளிப் போல போல வென்று கொட்டும் வள்ளல் மாதிரி வானம் மழையைக் கொட்டிவிட்டு நிர்மல மாகி விட்டது. மரத்திலிருந்த பறவைகள், உடலிலிருந்த ஈரத்தைச் சிலிர்த்து உதறிக் கொண்டிருந்தன. அந்த ரம்மியமான சூழ் நிலையில் தாமிரபரணிக் கரையிலிருந்த அகஸ் தியர் கோயிலுக்குள்ளிருந்து சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டிருந்தான் ரங்கமணி. அந்தக் காட்டுப் பிரதேசத்தில் அவன் மட்டும் அங்கே நின்று கொண்டு யாரையோ எதிர் பார்த்துக் கொண்டிருந்தான்.

அந்தச் சூழ்நிலையும், மழைக்குப் பிறகு ஏற்பட்டிருந்த குளிர்ச்சியும் அவனுக்குப் பழைய சம்பவங்களை ஞாபகமூட்டின.

பொதிகை மலையிலிருந்து தாமிரபரணி இறங்கி வரும் இடத்தில்தான் பாபநாசம் இருக்கிறது. பாபநாசத்தை ஒட்டிய பொதிகை மலையில்தான் அகஸ்தியர் தமிழைத் தாலாட் டினார் என்பதை நிரூபிக்கப் பொதிகையி லிருந்து தாமிரபரணி கீழிறங்கி வரும் இடத் தில் ஓர் அகஸ்தியர் கோயில் இருக்கிறது.

அந்தக் கோயிலுக்கு ஒரு முறை கமல வாசகியுடன் ரங்கமணி வந்திருந்தான். அந்த நினைவு அவனுள் குறுகுறுத்தது. அப் போது துணைக்கு சர் டி. முத்தையாபிள்ளை வந்திருந்தார். அவரைப் பாபநாசம் கோயி லில் உட்கார வைத்து விட்டு அவனும் கமல வாசகியும் அந்தக் காட்டுப் பிரதேசத்தில் சுற்றித் திரிந்தது நினைவில் வட்டமிட்டபோது ஒரு நீண்ட பெருமூச்சுத்தான் பிறந்தது. பம்பாயிலிருந்து வந்ததும் ஒரு முறை கமலவாசகியை வலியச் சென்று பார்த்துவிட வேண்டும் என்றுதான் முடிவு செய்திருந் தான். ஆனால் இடையே எத்தனையோ சம்ப வங்கள் நிகழ்ந்து விட்டன.

நாடெங்கும் பற்றி எரியும் புரட்சித் தீ தணிந்த பிறகு கமலவாசகியைப் போய்ப் பார்த்துவிட்டு வரவேண்டும்..... என்னை வரவேற்பாளா அல்லது இன்னும் கோபம் தணியாமல்.... பிடிவாதக்காரிதான். என்ன தான் செய்கிறாள் என்று பார்ப்போமே.... அத்தனை நாள் ஒட்டி ஒட்டிப் பழகி நெஞ் சைப் பறிகொடுத்ததெல்லாம் பொய்யாகி விடுமா....? நான் அவளை நினைத்து உருகுவ தைப் போல்தான் அவளும் உருகிக் கொண் டிருப்பாள். நானே நேரில் சென்று திடீ ரென்று அவள் முன்னால் போய் நின்றால் எப்படியிருக்கும்....? திகைத்துத் திணறிப் போய்... வேடிக்கையாக இருக்கும்....





அவர்கள் தோற்றத்திலே
ஒற்றுமையில்லை,
அவர்கள் அனைவரும்
உபயோகிப்பது
பரிபூரண ஒப்பனைச்
சாதனமான

க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்



இழைவான மென்மை வாய்ந்த
க்ருக்ஸ் லாக்டோ-காலமைன் எத்தகைய
குறைபாட்டையும் ஒளித்துவிடும்
பரிபூரணஒப்பனைச் சாதனம்.
நாள்தோறும் சருமத்தின்மீது தடவுங்கள்
லாக்டோ-காலமைன். இதமான
ஆற்றும் குணமுள்ள காலமைன்,
செறிவூட்டும் செயல் திறனுள்ள
விடச் ஹேஸல் இரண்டும் இணைந்து
உங்கள் சருமத்திற்கு எழிலூட்டும்.

க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்




மாசில்லா அழகுக்கு!
மேலும் உங்களுக்கு உரிய அழகு
சாதனங்கள் லாக்டோ-காலமைன்
டால்கம் பவுடர் மற்றும் க்ரீம்.

களவிடமுடியாத க்ருக்ஸ் ஸீலும்,
க்ருக்ஸ் சின்னமும் இருக்கிறதா
என்று கவனித்து வாங்குங்கள்.
க்ருக்ஸ் இன்டர்ஃப்ரான் லிமிடெட், பம்பாய்-25

---

CIL. 72 TM

ரங்கமணி கற்பனையில் மூழ்கிக் கிடந்தான். திடீரென்று பக்கத்தில் காலடிச் சத்தம் கேட்கவே சிந்தனை கலைந்து கூர்ந்து கவனித்தான். கோயிலின் வடபுறத்திலிருந்து தான் ஓசை கேட்டது. கைக் கடிகாரத்தைப் பார்த்தான். மணி நான்கு. மத்தியானம் இரண்டு மணியிலிருந்து காத்திருக்கிறான். இப்போது காலடிச் சத்தம் கேட்டதும் பரபரப்படைந்தான். கோயிலுக்குள் நன்றாக மறைந்து கொண்டு எட்டிப் பார்த்தான். இரகசியப் போலீஸ் காசிலிங்கமும் வடிவேலுவும் வேகமாக வந்து கொண்டிருந்தார்கள். ரங்கமணி விரைந்து வெளியே வந்தான்.

''என்ன, காரியம் கைகூடுமா?'' ஆவலோடு கேட்டான் ரங்கமணி.

''அருமையான சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. பாபநாசம் பஞ்சாலையிலே கலவரம் நடக்கலாம் என்ற பயம் இருப்பதால் சிவானந்தம் ஐந்து மணிக்குப் பஞ்சாலைக்குப் போய் விடுவார். அவர் மனைவி ஆறு மணிக்கெல்லாம் காரில் அணைக்கட்டு வரைக்கும் போய்வரத் திட்டமிட்டிருக்கிறாள். கோயிலுக்குப் பக்கத்தில் உள்ள பங்களாவில்தான் தங்கியிருக்கிறார்கள்'' என்றான் வடிவேலு.

''காரில் டிரைவர் இருப்பானே?'' ரங்கமணி கேட்டான்.

''நான்தான் ஓட்டிப் போகிறேன். டிரைவர் மத்தியானம்தான் ஆற்றில் குளிக்கும் போது பாறையிலிருந்து விழுந்து காலை ஒடித்துக் கொண்டான்.''

''பேஷ்.. அருமையான சந்தர்ப்பம்'' என்று கூறி உற்சாகத்துடன் வடிவேலுவின் முதுகில் தட்டினான் ரங்கமணி.

..''டிரைவர் இல்லாததால் நானே காரை ஓட்டிக் கொண்டு போக வேண்டும் என்று சிவானந்தம் உத்தரவிட்டிருக்கிறார். போய் விட்டு ஏழுமணிக்குத் திரும்பிவிட வேண்டும் என்றும் கண்டிப்பாகக் கூறியிருக்கிறார்.''

''நாங்கள் எங்கு நிற்க வேண்டும்?'' என்று பரபரப்புடன் கேட்டான் ரங்கமணி.

''நீங்கள் இருவரும் மலை மேல் அணைக்கு ஏறும் பாதையில் இரட்டை இலுப்பை மரம் இருக்கிறதே. அதற்குப் பக்கத்தில் ஓர் ஓடை இருக்கிறதல்லவா ? அங்கு பதுங்கிக் கொள்ளுங்கள். சரியாக ஆறே முக்காலுக்கு அங்கு காரைக் கொண்டு வந்து விடுவேன். ஒரு பர்லாங் தள்ளி வரும் போதே விட்டு விட்டு மூன்று முறை ஹாரன் அடிப்பேன். ஓடைப் பாலத்தின் மீது வந்து உட்கார்ந்து கொள்ளுங்கள். பாலத்து வளைவில் வந்ததும் காரின் வேகத்தைக் குறைத்து விடுவேன். பாலத்துக்குள் வந்ததும் காசிலிங்கம் கையை நீட்டட்டும். நான் காரை நிறுத்திவிடுவேன். காசிலிங்கம் என்னைக் கட்டிப் போட்டுவிட்டுக் காரைச் செலுத்த வேண்டும். அதற்குள் நீ பின் பக்கம் ஏறி அவளைக் கவனித்துக் கொள்ள வேண்டும். முதலில் அவள் சப்தமிடாமல் வாயில் துணியை அடைத்துவிடு'' என்றான் வடிவேலு.

''கைத் துப்பாக்கி தேவை இருக்காது இல்லையா?'' ரங்கமணி கேட்டான்.

''மடியிலேயே இருக்கட்டும். அந்தப் பக்கத்தில் காட்டில் விறகு பொறுக்கிவிட்டுத் திரும்புபவர்கள் அதிகம். அந்தச் சமயத்தில்




''என்ன காரணமோ தெரியவில்லே. என் நர்ஸிங் ஹோமுக்கு பேஷண்டுகள் யாருமே வரமாட்டேன்கிறாங்க, சார்!''

''முதலில் உங்க இன்ஷியலை எடுத்து விடுங்க! பிறகு பாருங்கள் கூட்டத்தை.''

அவர்கள் யாரேனும் அங்கு வந்தால் துப்பாக்கி தேவைப்படலாம்.''

''அணையில் வேலை செய்யும் கூலிகள் திரும்பி வரும் நேரமாயிருக்குமோ?''

''ஊஹூம்.... ஏழு மணிக்கு மேல்தான் கூலிகள் புறப்படுவார்கள். அதற்குள் நம் வேலை முடிந்துவிடும்....'' என்றான் வடிவேலு.

''சரி, நீ சீக்கிரம் போ. நாங்கள் அந்த இடத்துக்கு வந்து விடுகிறோம்....'' என்றான் காசிலிங்கம், வடிவேலுவைப் பார்த்து.

வடிவேலு சென்ற பிறகு ரங்கமணியும் காசிலிங்கமும் அகஸ்தியர் கோயிலிலேயே ஆறுமணி வரை இருந்தார்கள். பிறகு இருவரும் ஆற்றங்கரை வழியாகவே நதி ஓடிவரும் திசைக்கு எதிர்த் திசையில் நடந்து சென்றார்கள். பிறகு குறுக்கு வழியாக நடந்து கீழ் அணைக்குச் செல்லும் பாதையைக் கடந்து மேல் அணைக்குச் செல்லும் பாதையை அடைந்தார்கள். காசிலிங்கத்திடமும் ரங்கமணியிடமும் கயிறு இருந்தது. விறகு பொறுக்குபவர்கள் போல் தோற்றமளித்தார்கள். காசிலிங்கம் வாங்கி வந்திருந்த வேர்க்கடலையை உடைத்துத் தின்று கொண்டே குறிப்பிட்ட பாலத்துக்குக் கீழே இறங்கி ஓடைக் கரையில் அமர்ந்தார்கள். ரங்கமணி கைக் கடிகாரத்தை அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தான். பொழுது நத்தை வேகத்தில் நகர்ந்தது. வேர்க்கடலையும் காலியாகிவிட்டது. ஓடைத் தண்ணீரை அள்ளிக் குடித்துவிட்டு ஓடைக் கரை மண்ணில் படுத்தார்கள்.

மணி ஆறேமுக்காலாகி விட்டது. இருவரும் பரபரப்படைந்தனர். ரங்கமணிதான் அதிக பரபரப்போடு காணப்பட்டான். இந்த மாதிரி ஆளைக் கடத்துவது அவனுக்குப் புது அநுபவம். அதுவும் ஒரு பெண்ணை...

திடீரென்று சற்றுத் தூரத்தில் காரின் ஹாரன் சப்தம் மூன்று முறை ஒலித்தது.



"கட்டில் வேணும். இருக்கா ?"

"நீங்கதானே சமீபத்தில் கல்யாணம் பண்ணினது? அப்பமன்னு குடும்பக் கட்டுப்பாட்டு அதிகாரியிடமிருந்து பர்மிட் வாங்கி யிருந்தால் தான் சப்ளை பண்ண முடியும் !"

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

இருவரும் வேகமாக ஓடையிலிருந்து மேட்டுக்கு ஏறிப் பாலத்தின் மீது போய் உட்கார்ந்து கொண்டார்கள். சற்றுத் தூரத்தில் சிவானந்தத்தின் கார் வந்து கொண்டிருந்தது. காருக்குள் கூர்ந்து கவனித்தார்கள்.

"வடிவேலுதான் ஓட்டி வருகிறான். பின் பக்கத்தில் அவள்தான் இருக்கிறாள்...." என்று முனகினான் காசிலிங்கம்.

"கார் நெருங்கியதும் நீ பாதையின் குறுக்கே நின்று கையைக் காட்டு" என்றான் ரங்கமணி.

பாதையின் வளைவில் வந்ததும் காரின் வேகம் குறைந்தது. பாலத்தை நெருங்கியதும் காசிலிங்கம் பாலத்திலிருந்து குதித்துப் பாதையின் குறுக்கே போய் நின்று கொண்டு வலது கையை நீட்டிக் காரை மறித்தான். கார் நின்றது. மறுகணம் காசிலிங்கம் முன் பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு காருக்குள் பாய்ந்தான். வடிவேலு எதிர்ப்பது போல் பாசாங்கு காட்டினான். அதே சமயம் பின்பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே பாய்ந்தான் ரங்கமணி. உள்ளே யிருந்த கமலவாசகி அதிர்ச்சியினால் சப்தம் போடக்கூட முடியாமல் பிரமிப்புடன் பார்த்தாள். கதவைத் திறந்து உள்ளே பாய்ந்த ரங்கமணி இடது கையால் அவள் தோளைப் பற்றிக் கொண்டு வலது கையால் தயாராக வைத்திருந்த துணியை அவள் வாயில் திணிக்க முயன்ற போது இருவர் பார்வையும் சந்தித்தன.

"ஆ....!"

ரங்கமணி அதிர்ந்து விட்டான். பூமியே கால்களுக்கு அடியிலிருந்து நழுவுவது போல் இருந்தது. உச்சியிலிருந்து உள்ளங் கால் வரை இரத்தம் உறைந்து விறைத்துவிட்டதைப் போன்ற உணர்ச்சி.

அவனை வெறிக்கப் பார்த்தாள்.

ரங்கமணியைக் கண்டதும் கமலவாசகியின் கண்கள் வியப்பினால் விரிந்தன. பேரதிர்ச்சிக்கு உள்ளாகிப் பிரமை பிடித்துப் போய்ச் சிலையாகி விட்டாள்.

ரங்கமணி தன்னைச் சமாளித்துக் கொள்ள முடியாமல் ஒருகணம் திணறினான். நிலைகுலைந்து சோர்ந்து விட்டான். உடலெல்லாம் வியர்த்துக் கொட்டியது. கமலவாசகியைப் பற்றியிருந்த கை நடுங்கியது. தானாக வலுவிழந்து பிடியைத் தளர்த்தியது.

கமலவாசகியின் பயம் மறைந்து விட்டது. ரங்கமணியைப் பார்த்த அதிர்ச்சிதான் அவளை ஆட்கொண்டிருந்தது. கண்கொட்டாமல் திகைப்புடன் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

திடீரென்று ரங்கமணி காரை விட்டு வெளியே வந்து பின் பக்கத்துக் கதவை அறைந்து சாத்திவிட்டு, "காசி.... நிறுத்து" என்று இரைந்தான். அப்போது காசிலிங்கம் வடிவேலுவின் கைகளைக் கயிற்றினால் கட்டிக் கொண்டிருந்தான். ரங்கமணியின் உத்தரவைக் கேட்டதும் காசிலிங்கம் திகைத்துத் திரும்பினான்.

"அவனை விட்டு விட்டு வெளியே வா.... சீக்கிரம்...." என்று மீண்டும் உத்தரவிட்டான் ரங்கமணி.

"என்ன சொல்லுகிறாய்?" — ஒன்றும் புரியாமல் திகைத்தான் காசிலிங்கம்.

"வெளியே வா, சீக்கிரம்.... "

காசிலிங்கம் தயங்கினான். வடிவேலுவைப் பார்த்தான். வடிவேலுவும் ஒன்றும் புரியாமல் திருதிருவென்று விழித்தான்.

"இறங்கு, சீக்கிரம்! இது என் உத்தரவு" என்று கோபத்துடன் இரைந்தான் ரங்கமணி. உடனே காசிலிங்கம் காரிலிருந்து இறங்கினான். முன்பக்கத்துக் கதவை ரங்கமணி சாத்திவிட்டு வடிவேலுவைப் பார்த்து, "ஏய், டிரைவர்! காரை ஓட்டிக் கொண்டு போ!" என்றான்.

வடிவேலு ஒன்றும் புரியாமல் அரைகுறையாகக் கட்டியிருந்த கட்டுக்களை அவிழ்த்து விட்டுக் கொண்டு தன் இடத்தில் போய் உட்கார்ந்தான்.

"ஊம்... சீக்கிரம் போ...." என்று ரங்கமணி எரிச்சலுடன் உத்தரவிட்டான். மறு கணம் கார் உறுமிக் கொண்டு வேகமாகச் சென்று மறைந்தது.

காரின் பின்பக்கத்திலிருந்த கமலவாசகி, பின்பக்கத்துக் கண்ணாடி வழியாக ரங்கமணியைப் பார்ப்பது தெரிந்தது.

பாலத்தின் மேல் ரங்கமணியும் காசிலிங்கமும் மட்டுந்தான் இருந்தார்கள். பலவித உணர்ச்சிகளால் தாக்குண்டு சோர்ந்து போய் நின்றான் ரங்கமணி. காசிலிங்கம் கோபத்தால் கொந்தளித்துக் கொண்டிருந்தான். ரங்கமணியைச் சுட்டுப் பொசுக்கிவிடுபவனைப் போல் முறைத்துப் பார்த்தான்.

"நீ ஒரு கோழை. பெண்ணைக் கண்டதும் பேடியாகி விட்டாய்" என்று சீறி விழுந்தான்.

"காசி...." — இரைந்து கத்தினான் ரங்கமணி. அவனுடைய கோபத்தைக் கண்டு அதிர்ந்து விட்டான் காசிலிங்கம்.

''என்னிடம் எதுவும் பேசாதே. இது என் சொந்த விஷயம்'' என்று கூறிவிட்டு வேகமாக நடந்தான் ரங்கமணி. ஒன்றும் புரியாமல் திகைப்புடன் அவனைத் தொடர்ந்து நடந்தான் காசிலிங்கம். ஒரு நல்ல சந்தர்ப்பத்தை ரங்கமணி வேண்டுமென்றே நழுவ விட்டு விட்டான் என்ற கோபத்தில் மனம் பொருமிக் கொண்டே நடந்தான் காசிலிங்கம்.

ஃ ஃ ஃ

**பா**பநாசத்திலிருந்து பஸ்ஸில் அம்பாசமுத்திரம் வந்தார்கள். அம்பாசமுத்திரத்துக்கு வரும் போது இரவு மணி எட்டாகி விட்டது. அங்கிருந்து திருநெல்வேலிக்கு மறு நாள் அதிகாலையில் நான்கு மணிக்குத்தான் ரயில் வண்டி இருந்தது. ஆகவே இருவரும் ரயில் நிலையத்திலேயே படுத்துக் கொண்டார்கள். அம்பாசமுத்திரத்துக்கு வந்ததும் ஒருமுறை வீட்டுக்குப் போய்த் தாத்தாவைப் பார்க்கலாம் என்றுகூட நினைத்தான் ரங்கமணி. ஆனால் மனம் குழம்பிக் கிடந்ததால் நேரே திருநெல்வேலிக்கே புறப்பட்டு விட்டான். மறு நாள் அதிகாலையில் நான்கு மணிக்கு ரயில் வண்டி ஏறினார்கள்.

வண்டியில் காசிலிங்கம் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. ரங்கமணியின் செயல் அவன் உள்ளத்தில் மிகுந்த வெறுப்பை உண்டாக்கியிருந்தது. ரங்கமணி இருந்த பக்கம் கூடத் திரும்பவில்லை.

ரங்கமணியின் இதயத்தில் புயல் வீசிக் கொண்டிருந்தது. எதிர்பாராத விதமாகக் கமலவாசகியைச் சந்தித்த அதிர்ச்சியிலிருந்து இன்னும் பூரணமாக விடுபடவில்லை. அந்தக் காரில் அவளைக் கண்டவுடனேயே அவனுடைய இதயத்தில் ஏதோ படீரென்று அறுந்தது போலிருந்தது. அத்தனை நாட்களாக அவனுடைய நெஞ்சில் ஒட்டிக் கிடந்த நம்பிக்கை கழன்று அவனை விட்டு ஓடிவிட்டது. இழக்கக் கூடாத ஒன்றை இழந்து விட்ட ஏமாற்றத்தில் நிலைகுலைந்து விட்டான். பித்துப் பிடித்தவனைப் போல் பரக்கப் பரக்க விழித்துக் கொண்டிருந்தான். அடிக்கடி பெருமூச்சுக் கிளம்பிக் கொண்டிருந்தது. வாய் ஏதேதோ முணு முணுத்துக் கொண்டிருந்தது. கண்களில் திடீர் திடீரென்று நீர் நிறைந்து முட்டியது. முகம் களையிழந்து சோம்பி விட்டது. இந்த உலகத்து நினைவே இல்லாதவனாய் ஏதோ கனவு உலகில் சஞ்சரிக்கும் பித்தனைப் போல் ஆகிவிட்டான்.

ஒருகணம் சிவானந்தத்தின் நினைவு தோன்றியது. தன் விரலில் கிடந்த பச்சைக் கல் மோதிரத்தைப் பார்த்தான். கண்களில் தேங்கியிருந்த கண்ணீர், மோதிரத்தின் பச்சை நிறத்தை மங்க வைத்தது. ''பொய்யாக நூறு வருஷம் வாழ்வதைவிட உண்மையாக ஒரு நாள் வாழ்ந்தாலும் போதும் என்பாயே, அதைக்கூடவா மறந்துவிட்டாய்?... என் வாழ்வையே பொய்யாக்கி விட்டாயே, ராணி பொய்யாக்கி விட்டாயே....!''

ரங்கமணியின் மனம் புலம்பியது! பார்வை எங்கோ சூனியத்தில் நிலைத்திருந்தது. புண்ணில் மாறி மாறி அடிபடுவதுபோல் அவன் நினைவில் கடந்த கால சம்பவங்கள் வந்து வந்து இடித்துக் கொண்டிருந்தன.

திருநெல்வேலி ரயில் வண்டி நிலையத்துக்கு வந்ததும் ரங்கமணியிடம் சொல்லிக் கொள்ளாமலே போய் விட்டான் காசிலிங்கம். ரயில் வண்டியிலிருந்து இறங்கிய ரங்கமணி தன் போக்கில் நடந்தான். அவனையும் அறியாமல் அவன் கால்கள் சிந்துபூந்துறைக்கு இழுத்துச் சென்றன.

சர்தாரின் வீட்டுக்குள் நுழைந்ததும் ஜிம்மி வாலை ஆட்டிக் கொண்டே ஓடி வந்து அவன் கால்களை நக்கியது. அதை லட்சியம் செய்யாமல் முன் அறைக்குள் நுழைந்து சோபாவில் தொப்பென்று விழுந்தான். ரங்கமணி வந்ததைக் கவனித்த திரிவேணி அவனுடைய அறைக்குள் நுழைந்தாள்.

''இரண்டு நாட்களாகக் காணவில்லையே? பயந்தே போனேன், ஏதாவது வெடிகுண்டு வீசப் போய் விட்டீர்களோ என்று. அப்பாவும் சரியான தகவல் கொடுக்கவில்லை'' என்று சொல்லிக் கொண்டே அவன் பக்கத்தில் வந்தாள். அவன் கண்களிலிருந்து கண்ணீர் பெருகிக் கன்னங்களில் வழிந்து கொண்டிருந்தது. திரிவேணியின் குரலைக் கேட்டதும் பரபரப்புடன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு திரும்பினான் ரங்கமணி. கவலையுடன் அவனை உற்றுப் பார்த்தாள் திரிவேணி.

அவன் முகம் சோம்பிக் கிடந்தது. தாங்க முடியாத அதிர்ச்சியால் அவன் உள்ளம் தத்தளிப்பது அவன் முகத்தில் நன்கு தெரிந்தது. திரிவேணிக்கு ஒன்றும் புரியவில்லை. அத்தையின் மறைவுதான் அவனுடைய துக்கத்துக்குக் காரணமாயிருக்குமோ என்று நினைத்தாள். ரங்கமணியை அந்த நிலையில் பார்க்கவே பரிதாபமாக இருந்தது. பக்கத்திலிருந்த சோபாவில் அமர்ந்தாள்.

''என்ன... ஏன் இப்படி இருக்கிறீர்கள்?'' என்று கனிவுடன் கேட்டாள்.

''ஒன்றுமில்லையே.... எப்படி இருக்கிறேன்?'' என்று கூறிச் சிரித்துச் சமாளிக்க முயன்றான்.

திருட்டுத்தனமாக வாயில் மிட்டாயைப் போட்டுக் கொண்ட குழந்தை, அதைக் கன்னத்தில் ஒதுக்கிக் கொண்டு ஒன்றுமில்லை என்று கையை விரிப்பதுபோலிருந்தது. சிரிப்பில் அசடு தட்டிற்று. அதில் உயிர் இல்லை. வழக்கமாக அவன் முகத்தில் பளிச்சிடும் குறுகுறுப்பும், களையும் இல்லவே இல்லை. அவன் முகம் வெளிறிப் போயிருந்தது.

அத்தை இறந்ததிலிருந்து அவனுடைய முகத்தில் பழைய ஒளி இல்லை என்பதைத் திரிவேணி உணர்ந்தாள். ஆனால் இப்போது அவன் சோர்ந்து போய் நிலைகுலைந்து கிடப்பதற்கு வேறு ஏதோ ஒரு காரணம் இருக்க வேண்டும் என்று சந்தேகித்தாள்.

''வெளியூரிலிருந்து வருகிறீர்கள் போல் இருக்கிறது. குளித்துவிட்டு வாருங்கள், களைப்பு நீங்கிவிடும். குமாரை வெந்நீர் போடச் சொல்கிறேன்'' என்று கூறி விட்டு வீட்டுக்குள் விரைந்தாள்.

திரிவேணிக்கு உள்ளூற இனம் புரியாத பயம் அழுத்தியது. ஏதாவது பயங்கரச் செயலில் ஈடுபட்டுவிட்டு அதனுடைய அதிர்ச்சியில் ரங்கமணி இப்படிப் பிரமையடைந்திருக்கிறானோ என்று பயந்தாள். **(தொடரும்)**

# லியூ ஸியாங் குட்டிக் கதைகள்



தொகுத்தவர்: கு. அழகிரிசாமி

[லியூ ஸியாங் என்ற சீன அறிஞர் கி. மு. 78ல் பிறந்தவர். அவர் எழுதிய கதைகளும் அவரால் தொகுக்கப்பட்ட கதைகளும் பல. ''உப கதைப் பூங்கா'', ''போர் செய்யும் ராஜ்யங்களின்கதைகள்'' என்ற அவருடைய நூல்களி லிருந்து எடுத்த சில கதைகள் இங்கே கொடுக்கப்பட்டுள்ளன.]

## நாரையும் சிப்பியும்



ஒரு சிப்பிப் பூச்சி குளிர் காய்வதற்காகத் தனது சிப்பியைத் திறந்து கொண்டிருந்த போது ஒரு நாரை அதைப் பார்த்துக்கொண்டது. உடனே அந்தப் பூச்சியைக் கொத்தித் தின்பதற்காகத் தனது அலகைச் சிப்பிக்குள் விட்டது. ஆனால் சிப்பிப் பூச்சி தனது சிப்பியை இறுக மூடிக் கொள்ளவே நாரையின் அலகு நுனி சிப்பிக்குள் அகப்பட்டுக் கொண்டது.

நாரை சொன்னது: ''இன்றோ நாளையோ என் அலகை நீ விடுவித்துக் கொள்ளாவிட்டால், இங்கே ஒரு சிப்பிப் பூச்சி செத்துக் கிடக்கும்.''

அதைக் கேட்ட சிப்பிப் பூச்சி உள்ளே இருந்து கொண்டே, ''இன்றோ நாளையோ உன் அலகை நீ விடுவித்துக் கொள்ளாவிட்டால், இங்கே ஒரு நாரையும் செத்துக் கிடக்கும்'' என்று பதில் கொடுத்தது.

இரண்டும் ஒன்றுக்கொன்று விட்டுக் கொடுக்கவில்லை. அந்த வழியே வந்த ஒரு மீனவன் இரண்டையும் பிடித்துக் கொண்டு போய் விட்டான்.

## யார் அதிக அழகு?

சீ ராஜ்யத்தைச் சேர்ந்த சூ என்ற பிரபு ஒரு நாள் காலையில் நன்றாக உடுத்துக் கொண்டு கண்ணாடியில் தமது உருவத்தைப் பார்த்தார். பிறகு தம் மனைவியை நோக்கி, ''யார் அதிக அழகு? வடக்கு நகரத்துப் பிரபுவா? நானா?'' என்று கேட்டார்.

''நீங்கள்தான் அழகு. உங்களுக்கு முன் வடக்கு நகரத்துப் பிரபு எம்மாத்திரம்?'' என்றாள் மனைவி.

ஆனால் வடக்கு நகரத்துப் பிரபு ஒரு நல்ல அழகன் என்று ராஜ்யமெங்கும் பிரசித்தம். அதனால் சூ தம் மனைவியின் வார்த்தையை அவ்வளவாக நம்பவில்லை. அவர் தம்முடைய ஆசை நாயகியிடம் போய், அதே கேள்வியைக் கேட்டார்.

''வடக்கு நகரத்துப் பிரபு உங்கள் அழகுக்கு முன் எம்மாத்திரம்?'' என்றாள் ஆசை நாயகி.

அப்புறம் சூயின் வேலைக்காரன் ஒருவன் வந்தான். அவனிடமும் அதே கேள்வியைக் கேட்டார் அவர்.

''நீங்கள்தான் ரொம்ப அழகு'' என்றான் வேலைக்காரன்.



மறு நாள் வடக்கு நகரத்துப் பிரபு அங்கே வந்தார். அவரை நன்றாகப் பார்த்தார் சூ. தம்மைவிட அவரே சிறந்த அழகுடையவர் என்பதைக் கண்டார். ஒரு முறை கண்ணாடியின் முன்பு நின்று பார்த்தார். சந்தேகமே இல்லை. வடக்கு நகரத்துப் பிரபுவே அழகில் சிறந்தவர் என்பது உறுதியாகிவிட்டது.

அன்றிரவு சூ பின்கண்ட முடிவுக்கு வந்தார்: ''நான்தான் அதிக அழகு என்று என்

மனைவி சொன்னான். அவன் எப்பொழுதும் என் சார்பிலேயே பேசுபவன். என் ஆசை நாயகி நான்தான் அதிக அழகு என்றான். அவனுக்கு என்னிடத்தில் எப்போதுமே பயம். என் வேலைக்காரனும் அப்படியே சொன்னான். அவன் என்னிடம் ஏதோ ஒன்றைக் கேட்டு வாங்குவதற்குத்திட்டம் போட்டிருக்கிறான்!''

✻—✻—✻—✻—✻—✻—✻—✻



கிழக்கே போன ஆந்தை

ஒரு நாள் ஓர் ஆந்தை ஒரு புறாவைச் சந்தித்தது.

''எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டது புறா.

''நான் கிழக்குச் சீமைக்குப் போய்க் கொண்டிருக்கிறேன்'' என்றது ஆந்தை.

''ஏன்? அங்கே என்ன விசேஷம்?''

''இங்கே உள்ளவர்கள் எல்லோருமே என் குரலைக் கேட்டு என்னை வெறுக்கிறார்கள். அதனால்தான் கிழக்கே போகிறேன்.''

''உன் குரலை உன்னால் புரிந்துகொள்ள முடியாவிட்டால் கிழக்கே உள்ள மக்களும் வெறுக்கத்தான் செய்வார்கள்'' என்றது புறா.

—✻—✻—✻—✻—✻—✻—✻—



கல்விச் சுடர்

பிங் பிரபு தம்மிடம் ஆதரவு பெற்று வாழ்ந்து வரும் கண் பார்வை இல்லாத ஷி குவாங் என்ற சங்கீத வித்வானை நோக்கி, ''எனக்கு வயது எழுபது ஆகிவிட்டது. புத்தகங்கள் படிக்க வேண்டும் என்று எனக்கு எவ்வளவோ ஆசை. ஆனால் காலம் கடந்து விட்டதே'' என்று சொன்னார்.

''அப்படியானால் ஒரு மெழுகுவர்த்தியை வைத்துக் கொள்ளலாமே?'' என்றார் வித்வான்.

''என்னைப் பார்த்துக் கேலியா பண்ணுகிறீர்?'' என்று கோபமாகக் கேட்டார் பிரபு.

''குருட்டு வித்வானாகிய நான் கேலி பண்ணுவேனா? இல்லவே இல்லை'' என்று சொன்ன ஷி குவாங் மேலும் கூறினார்: ''நான் கேள்விப்பட்ட ஒன்றைத் தங்களுக்குச் சொல்கிறேன். ஒருவன் வாலிபத்தில் கற்க விரும்பினால், அவனுடைய எதிர்காலம் காலை வெய்யிலைப் போல் பிரகாசமாக இருக்கும். நடு வயதில் கற்கத் தொடங்கினால் அது மத்தியான வெய்யிலைப் போன்றது. வயதான பிறகு படிக்க ஆரம்பித்தால் அது மெழுகுவர்த்தி வெளிச்சம் மாதிரி. மெழுகுவர்த்தியின் வெளிச்சம் மிகவும் பிரகாசமாக இல்லாவிட்டாலும் இருட்டில் தடவிக் கொண்டிருப்பதை விட எவ்வளவோ மேல் அல்லவா?''

குருட்டு வித்வான் சொன்னதைப் பிரபு ஒப்புக் கொண்டார்.

■—■—■—■—■—■—■—■—■—■—■—



கடைசி உபதேசம்

சாங் கவாங் நோய்வாய்ப்பட்டிருந்த போது லாவோட்ஸே அவரைப் பார்க்க வந்தார்.

''உங்கள் உடல்நிலை நன்றாக இல்லை. மாணவனாகிய எனக்கு ஏதாவது சொல்வதாக இருந்தால் இப்போது சொல்லிவிட வேண்டும்'' என்று லாவோட்ஸே கேட்டுக்கொண்டார்.

''நீ கேட்காவிட்டாலும் நான் சொல்வதாகத்தான் இருந்தேன். ஒருவன் தன்னுடைய ஊருக்கு வந்ததும் ஏன் வண்டியை விட்டு இறங்க வேண்டும் என்று உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டார் சாங் கவாங்.

''ஒருவன் தன் பூர்வீகத்தை மறந்து விடக் கூடாது என்பதுதானே இந்த வழக்கத்தின் பொருள்'' என்றார் லாவோட்ஸே.

''உயரமான மரத்தின் கீழாகப் போகும் போது ஏன் ஓடவேண்டும் என்று உனக்குத் தெரியுமா?''

''வயதானவர்களை மதிக்க வேண்டும் என்பதுதானே இந்த வழக்கத்தின் பொருள்?''

பிறகு சாங் கவாங் தமது வாயை அகலமாகத் திறந்து உள்ளே பார்க்கும்படி லாவோட்ஸேக்குக் கூறினார்.

''இன்னும் என்னுடைய நாக்கு அங்கே இருக்கிறதா?'' என்று கேட்டார் சாங் சுவாங்.

''ஆம்'' என்றார் லாவோட்ஸே.

''இன்னும் என் பற்கள் அங்கே இருக்கின்றனவா?''

''இல்லை.''

''ஏன் இல்லை என்று உனக்குத் தெரியுமா?''

''நாக்கு மிருதுவாக இருப்பதால்தானே அது பற்களைவிட அதிக நாள் இருக்கிறது? பற்கள் கடினமாக இருப்பதால்தானே சீக்கிரத்தில் விழுந்து விடுகின்றன?''

''ஆம். இப்போது உலக வாழ்க்கை சம்பந்தமான எல்லாக் கோட்பாடுகளையும் நீ கற்றுக் கொண்டு விட்டாய். இனிமேல் உனக்குப் போதிக்க என்னிடம் ஒன்றும் இல்லை'' என்று சொல்லி அனுப்பினார் சாங் சுவாங்.

—□—□—□—□—□—□—□—□—□—□—□

## தவறான பாதை

வெய் ராஜ்யத்தின் அரசன் சாவோ ராஜ்யத்தின் தலைநகரான ஹான்டன் மீது படையெடுக்கத் தீர்மானித்தான். அதை சி — லியாங் என்பவர் கேள்விப்பட்டார். அப்போது அவர் பிரயாணம் செய்துகொண்டிருந்தார். ஆனாலும் உடனடியாக அரசனிடம் வந்து பின்வருமாறு கூறினார்:

''நான் வரும்போது தைஹாங் மலையில் ஒருவனைச் சந்தித்தேன். அவன் வடக்கு நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். சு ராஜ்யத்துக்குப் போய்க்கொண்டிருப்பதாக அவன் என்னிடம் சொன்னான். நான் அவனைப் பார்த்து, 'சு ராஜ்யத்துக்குப் போகிற நீ வடக்கு நோக்கி ஏன் போய்க் கொண்டிருக்கிறாய்?' என்று கேட்டேன்.

'' 'ஏன், என்னிடம் நல்ல குதிரைகள் இருக்கின்றனவே?' என்று சொன்னான்.

'' 'நல்ல குதிரைகள் இருக்கலாம். ஆனால் நீ தவறான திசையில் அல்லவா போய்க் கொண்டிருக்கிறாய்?' என்றேன் நான்.

'' 'என்னிடம் நிறையப் பணம் இருக்கிறது' என்றான் அவன்.

'' 'உன்னிடம் நிறையப் பணம் இருக்கலாம். ஆனால் இது தவறான பாதை' என்று நான் சொன்னேன்.

'' 'என் வண்டியை ஓட்டுகிறவன் மிகவும் கெட்டிக்காரன்'.

'' 'உன்னுடைய குதிரைகள் எவ்வளவுக்கு எவ்வளவு நல்ல குதிரைகளாக இருக்கின்றனவோ, உன்னிடம் எவ்வளவுக்கு எவ்வளவு நிறையப் பணம் இருக்கிறதோ, உன் வண்டியை ஓட்டுகிறவன் எவ்வளவுக்கு எவ்வளவு கெட்டிக்காரனாக இருக்கிறானோ, அவ்வளவுக்கு அவ்வளவு நீ சு ராஜ்யத்தை விட்டு அப்பால் போய்க் கொண்டிருப்பாய்' என்று நான் சொன்னேன்.''

## பின்புறத்தில் இருக்கும் ஆபத்து

வு ராஜ்ய மன்னன், சு ராஜ்யத்தைத் தாக்கத் தீர்மானித்தான். அதை யாராவது ஆட்சேபித்தால், அப்படி ஆட்சேபிக்கிறவருக்கு மரண தண்டனை விதிக்கப்படும் என்று தன் பிரஜைகளுக்குக் கடுமையான எச்சரிக்கையும் விடுத்திருந்தான். ஆனாலும் அவனுடைய வேலைக்காரர்களில் ஒருவன் ஆட்சேபிக்க விரும்பினான். அதற்குத் துணிவில்லை. எனினும், அவன் ஒரு கவணையும் உருண்டைக் கற்களையும் எடுத்துக் கொண்டு அரண்மனையின் கொல்லைப்புறத்தில் போய் உலாவிக் கொண்டிருந்தான். பனியினால் அவன் உடைகளெல்லாம் நனைந்து விட்டன. அவன் அங்கே மூன்று நாட்கள் உலாவினான்.

அரசன் அவனைப் பார்த்து, ''வா இங்கே'' என்று அழைத்து, ''பனியில் நனைந்து கொண்டு அங்கே என்ன செய்கிறாய்?'' என்று கேட்டான்.

வேலைக்காரன் பின்வருமாறு பதில் சொன்னான்: ''தோட்டத்தில் ஒரு மரம் இருக்கிறது. அந்த மரத்தில் ஒரு பூவிலிருந்து ஒரு வண்டு தேனைக் குடித்துக் கொண்டிருக்கிறது. வண்டைப் பிடிக்க வேண்டும் என்று ஓர் ஓணான் தக்க சமயத்தை எதிர்பார்த்துப் பின்புறத்தில் காத்துக் கொண்டிருக்கிறது. அது வண்டுக்குத் தெரியாது. வண்டைப் பிடிப்பதற்காக ஓணான் முன் கால்களைத் தூக்கிக் கொண்டிருக்கும்போது அதன் பின்புறத்தில் ஒரு பருந்து உட்கார்ந்துகொண்டு ஓணானைக் கொத்திக் கொண்டு போகக் கழுத்தைத் தூக்கிக் கொண்டு தயாராக இருக்கிறது. அது ஓணானுக்குத் தெரியாது. அதே சமயத்தில் பருந்தைக் கவணை கொண்டு அடித்து வீழ்த்துவதற்குக் கீழே நான் நிற்கிறேன் என்பது பருந்துக்குத் தெரியாது. மூன்று பிராணிகளும் தங்கள் கண் முன்னே இருக்கும் ஜந்துக்களை அடித்து ஆதாயம் பெறப் பார்க்கும் அதே சமயத்தில் தங்களுக்குப் பின்புறத்தில் இருக்கும் ஆபத்தை உணரவே இல்லை.''

வேலைக்காரன் சொன்னதைக் கேட்ட அரசன், ''பேஷ்! நன்றாகச் சொன்னாய்'' என்று பாராட்டினான். சு ராஜ்யத்தைத் தாக்கும் திட்டத்தைக் கைவிட்டான்.

□—□—□—□—□—□—□—□—□—□—□—□—□—□—□—□—□—□—

## அத்தியாயம் 4




பிள்ளையின் பேச்சைக் கேட்க லட்சுமி அம்மாளுக்கு அருவருப்பா யிருந்தது. என்ன சொன்னாலும் அவனைத் திருத்தி நல்வழிப்படுத்த முடியாது என்பது அவளுக்கு நிச்சயமாகத் தெரிந்து விட்டது. அவனுக்கு என்ன பதில் சொல்லுவதென்று விளங்காமல் லட்சுமி அம்மாள் மௌனமாக இருந்தாள்.

ராஜா மீண்டும் தொடர்ந்தான்: ''ஒருத்தனை ஏமாத்தப்படாது, வஞ்சிக்கப்படாதுன்னெல்லாம் சொல்றியே, இந்தக் காலத்துக்கு அது பொருந்தாது. அந்தக் காலத்திலே, ஊர்னு கட்டுப்பாடு இருந்தது. தாயாதின்னு ஒற்றுமை இருந்தது. ஒருத்தன் பேர்லே இன்னொருத்தனுக்கு நம்பிக்கை இருந்தது. இப்போ இதுக்கெல்லாம் யாருக்கும் அர்த்தமே தெரியாது.''

தன்னுடைய கை வியர்வையில் கசிந்த நாற்பது ரூபாயை இடது கைக்கு மாற்றிக்கொண்டே லட்சுமி அம்மாள் கேட்டாள்: ''நீ என்னிக்குமே இப்படித்தான் இருப்பியா? இப்படியே இருந்தா உன்னை நம்பிப் பெண்டாட்டியா வர்றவள் வயித்திலே நெருப்பைக் கட்டிக்கொண்டுதானே வாழணும்.....?''

இகூரென்று ராஜா கலகலவென்று சிரித்தான். ''அம்மா... நான் வேணும்னுதான் இப்போ எப்படியெல்லாம் சம்பாதிக்க முடியுமோ, அப்படியெல்லாம் சம்பாதிக்கிறேன்..... பணம் இன்பத்தைத் தரும்னு நான் சம்பாதிக்கவில்லே. கவலே இல்லாம வாழ அது சகல சௌகரியங்களையும் தர்றது.... காத்து வேணுமா, ஃபான்...! இன்னொருத்தர்கிட்டே இருந்த இடத்திலிருந்தே பேசணுமா, ஃபோன்! நினைச்ச இடத்துக்கு நினைச்ச நேரத்திலே போகணுமா, கார்...! காலையிலே டில்லிக்குப் போய்ச் சாயங்காலம் திரும்பப்ளேன்!.... இதெல்லாம், கோதண்டராமன் மாதிரி உள்ளவர்கள் எண்ணி எண்ணிக் கொடுக்கிற இருநூறு ரூபாயிலே நடக்காது அம்மா. வாராந்திர அரிசிக்கும் எண்ணெய்க்கும்தான் அது காணும்!'' என்றான்.

''நீ என்ன சொல்றே? உன் மனசு எனக்குப் புரியலேயே......?''

''நான் எப்பவும் இப்படியே இருப்பேனேன்னுதானே பயப்படறே..? கண்டிப்பா நான் என்னை மாத்திண்டுவிடுவேன். என் மனசிலே ஒரு குறி வைச்சுண்டுதான் இந்த விளையாட்டை ஆரம்பிச்சிருக்கேன். இன்னும் கொஞ்ச நாளிலே, இல்லாட்டா சில மாசத்திலே இந்தக் குறியை எட்டிப் பிடிச்சுடுவேன். அப்புறம் என்னை யாரும் அசைக்க முடியாது. அஞ்சாறு வருசத்துக்கு அப்புறம் நீ காரிலேயே போவியே, அப்போது இன்னிக்கு நடக்கிறதை யெல்லாம் மறந்து போய் இருப்பே......''

''நீ என்னதான் ஆயிரம் சொல்லு. நம்ம குலத்திலேயும் குடும்பத்திலேயும் இல்லாத தொழிலே நீ செய்யறே!''

''பூ!'' என்று அலட்சியமாகக் கத்திவிட்டு ராஜா ஷர்ட்டைக் கழற்றினான். பிறகு கழற்றிய ஷர்ட்டை ஒரு கையில் வைத்துக்கொண்டு வேஷ்டியின் மீதிருந்த பெல்ட்டின் மேல் இன்னொரு கையால் தடவிக் கொண்டே சொன்னான்: ''உலகத்திலே பாதிப் பேர் அயோக்கியத்தனம் செய்யாவிட்டாலும், ஸ்விட்சைப் போட்டதும் எலக்ட்ரிக் விளக்கு எரியறதே, அந்த நேரத்துக்குள்ளே பணம் சம்பாதிக்கணும்னுதான் துடிக்கிறா. ஆனா கோழை மனசு, சொப்பனம் மட்டும்தான். காண்றா.....! தைரியம் இருக்கிறவனுக்குச் சந்தர்ப்பம் வாய்ப்பதில்லே. தைரியமும் சந்தர்ப்பமும் இருந்தால் சாமர்த்தியம் போதமாட்டேன் என்கிறது.....!''

''உன்கிட்டே இந்த மூணும்இருக்கு. அது என் போதாத காலம்!'' லட்சுமி அம்மாள் தலையில் அடித்துக் கொண்டாள்.

'' 'கொரோனரி த்ராம்பாஸிஸ்னு' ஒரு வியாதி இருக்கு. கேள்விப்பட்டிருக்கியா, அம்மா....? அதுதான் கோதண்டராமனுக்கு வந்திருக்கு.... அதிலே ஒருத்தர் பிழைச்சிருக்கிறதாக

இன்னும் சரித்திரம் சொல்லல்லே. முதல் தடவை மாரைப் பிடிச்கண்டு அலறுவா..... அது யமன் கொடுக்கிற ஃபர்ஸ்டு நோட்டீஸ்....!''

''அதனுலே.....?''

''அதனுலே அவர் வாயைப் பிளக்கிறதுக்கு முன்னுலே நான் என்ன செய்தாலும், என்ன கொண்டு வந்தாலும், நீ வாயைத் திறக்கப்படாது. திறந்தா, நான் தனியாக ஏதாவது ரூம் பார்த்துண்டு இருந்துடுவேன். பெத்த கடனுக்கும் வளர்த்த கடனுக்கும் நான் அனுப்பறதை வைச்சுண்டு நீயும் அப்பாவும் இருக்கணும்.......''

பிள்ளை வெறும் வீருப்பாகப் பேசுகிறவன் இல்லே என்று லட்சுமிக்குத் தெரியும்.

அவள் நாற்பது ரூபாயைப் பெட்டியில் வைக்கப்போனுள். 'இந்தப் பாவி இது வரையிலே ரெண்டாயிரம் வரைக்கும் கொண்டு வந்து விட்டானே!'' என்று நெஞ்சம் பதைக்க அவள் வாய் முணுமுணுத்தது.

ராஜா சிறிது நேரம் தூங்கலாம் என்று பாயை விரித்தான்.

ராஜா பார்ப்பதற்கும் ராஜாதான். வாட்டசாட்டமான உடற்கட்டு. நீண்ட கூர்மையான மூக்கும், பார்த்தவுடனே மனத்தில் பதியும் கண்களும். அவனுடைய நடையின் அலட்சியத்தை ரசிக்க முடியாதவர்கள் இருக்க முடியாது. பேசினுல் நேரம் போவது தெரியாமல் கேட்டுக் கொண்டே இருக்கலாம். அவனுக்கு உலகத்தில் தெரியாத விஷயங்களே இல்லே எனலாம். அமெரிக்காவில் எத்தனை கோடீசுவரர்கள் இருக்கிருர்கள். ஆஸ்திரேலியாவில் ஆடு மாடுகள் அதிகம் இருப்பதற்கு என்ன காரணம், சைனுவின் கம்யூனிஸம்



இந்தியாவுக்கு ஏன் வரக் விடாது, த்வைத, அத்வைத, விசிஷ்டாத்வைதங்கள் ஒவ்வொன்றும் என்னென்ன சொல்லுகின்றன என்று அவனுக்கு எல்லாம் மனப்பாடம். குதிரைப் பந்தயமா? ஒரு பைசா கட்டி ஆட மாட்டான்! ஆனால் பந்தயக் குதிரையின் அப்பா அம்மா பெயரிலிருந்து எல்லாம் தெரியும்! சீட்டாட்டமா? தெரியும். ஆனால் தொட மாட்டான். சங்கீதமா? அனுலோமம், பிரதிலோமத்தைப் பற்றி அரை மணி நேரம் பேசுவான். நாககவர வித்துவான் ராஜரத்தினம் தோடியில் சுருதிபேதத்தை எடுத்துக் காட்டுகிற அழகை வர்ணிப்பான்.



பெண்கள் யாரும் இதுவரையில் அவன் மனத்தை ஈர்த்ததில்லை. ஆனால் ஓர் அழகான பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு அவனுடன் சுகமாக இருக்க வேண்டும் என்ற கனவுகளை காண்கிறவன். அவனுடைய கண்களுக்கு அகிலா சாதாரண அழகுதான். அவளுடன் பழகி, அவளுடைய நட்பைப்பெற முயல்வது, அவளைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற காரணத்துக்காக அல்ல! ரவியுடன் இதமாகப் பேசியும், அவனுக்கு வேண்டியதெல்லாம் கோதண்டராமனிடம் சொல்லி வெளியூர்களுக்கு ஐந்நூறு அறுநூறு என்று பணம் அனுப்பியும் அவனுடைய நட்பை ஓரளவு பெற்றிருந்த அவன், அகிலாவின் மனத்துக்கும் திருப்தி அளித்து விட்டால் அவற்றால் எவ்வளவோ அனுகூலங்கள் பிற்காலத்தில் உண்டாகும் என்று எதிர்காலத்தை நினைத்து எண்ணினான்.

பாக்கியம் அவனை ஒரு பொருட்டாக மதிப்பதில்லை என்பதை ராஜா அறிவான். அவனும் கூடிய மட்டும் அவளுடைய வழிக்குச் செல்லாமலேயே இருந்தான். ஆனால் அவனுடைய அதிர்ஷ்டம், கோதண்டராமனுக்கு 'ஹார்ட் அட்டாக்' வந்ததற்குப்பின் பாக்கியமே அவனிடம் மனம் விட்டுப் பேச ஆரம்பித்திருக்கிறாள். அவளுக்கு அவன் ஓயாமல் ஒழியாமல் செய்த பணிவிடை அவளுக்கு அவன்பால் திருப்தியையும் ஓர் அபிமானத்தையும் ஏற்படுத்தியிருக்க வேண்டும்! இது நல்ல சூசகம்தான்!

அன்று அவன் ஐந்து மணிக்கு அடையாறுக்கு வந்து பஸ் நிலையத்தில் நின்ற போது, மெயின் ரோடில் 'ஆ' என்ற ஓர் அலறல் திடீரென்று எழுந்தது. இருந்த இடத்திலிருந்தே திரும்பிப் பார்த்த போது—



இரண்டுங்கெட்டான் வயதில் ஒரு பையனும் ஒரு வயது வந்த பெண்ணும் விழுந்து கிடந்தார்கள். பையன் துள்ளி எழுந்து விட்டான். அந்தப் பெண் சைக்கிளின் முன் சக்கரத்தில் மாட்டியிருந்த புடவையை எடுக்க முயன்று கொண்டிருந்தாள்.

# உங்கள் சமையல் பிரச்சினைக்கு முடிவு காண்கிறது

# கால்காஸ்

C.GAS.G. 3A TA.






ஒரு கால்டெக்ஸ் தயாரிப்பு

சமையல் அறையிலே கால்காஸ் நிறுவினால், சமையல் செய்வதிலே உள்ள ஆனந்தம் உங்களுக்குப்புரியும். கால்காஸ் உபயோகிக்க எளிதானது...நொடியில் பற்றிக் கொள்கிறது ...உடனடியாக சூடு கொடுத்து, சமையல் நேரத்தை மணிக் கணக்கில் குறைக்கிறது...சிக்கனமானதும் கூட. கால்காஸ் சுத்தமானது..கரியில்லை புகையில்லை.. தேய்த்துக்கழுவும் தொல்லையுமில்லை.

## கால்காஸ் அபாயமற்றது...

விசேஷமான மூடியைக் கொண்ட அபாயமற்ற இரும்பு ஸிலிண்டர்களில் கால்காஸ் வருவதால், ஒழுக்கோ, கையாளுவதில் தவறுதலோ எதுவும் நேராது.

## வீட்டிலே டெலிவரி கொடுக்கப் படுகிறது

ஏக போக விநியோகஸ்தர்கள் :

**ஈஸ்ட் கோஸ்ட் காஸ் கம்பெனி,**

48-9-5 கோவாபரேடிவ் காலனி, துவாரகாநகர், விசாகப் பட்டினம் 4. போன் : 3516

கன்னமாரா அனெக்ஸ், மவுண்ட் ரோடு, மதராஸ் 2. போன் : 83428

**ஏஜெண்ட்ஸ்:** மதராஸ், காக்கிநாடா, விசாகப்பட்டினம், விஜயவாடா, எலூரு, குண்டூர், பலகோல், ராஜமுந்திரி, நெல்லூர், விஜயநகரம், மசூலிப்பட்டினம்,சேலம், காட்பாடி, ஓங்கோல், வாரங்கல். பாண்டிச்சேரி, காஞ்சிபுரம், கர்நூல், சித்தூர், திருப்பதி, பொப்பிலி, பார்வதிபுரம், ராமச்சந்திர புரம், சோம்பேடா, நரசராவ்பெட்.

ராஜா விரைந்து சென்றான்.

செய்வதறியாமல் பயம் உடம்பெல்லாம் வியாபித்து நின்ற பையன் ராஜாவைப் பார்த்து, "ஸடனா, குறுக்கே வந்துட்டாங்க.... பாலன்ஸ் போயிடுத்து....." என்று கெஞ்சினான்.

அவனை லட்சியம் செய்யாமல், ராஜா சைக்கிளை நிறுத்தினான்.

"இப்போது மெதுவாக எடுங்கள், அடடா, காலிலே ரத்தம் வர்றதே!"

"ஆமாம்!" என்று முனகின அவள் புடவையின் ஓரம் இன்னும் சிக்கிக் கொண்டு என்ன முயன்றும் வராமல் போகவே, ஆத்திரம் தீர இழுத்தாள்.

"புடவை கிழிஞ்சுடுத்து... "

"தொலையட்டும்!" என்று கறுவின அவள், தனது கைக் குட்டையால் கட்டை விரலினடியில் ஒழுகிக் கொண்டிருந்த ரத்தத்தைத் துடைத்தாள். இடித்த வேகத்தில் எறியப்பட்டிருந்த வலது கால் செருப்பை ராஜா கையில் எடுத்துக் கொண்டு அவளருகே போட்டான்.

"தாங்க்ஸ்...." என்ற அவள், அந்தப் பையனைப் பார்த்து "ஏண்டா, முட்டாள்மாதிரி ஓட்டறியே.....பார்த்துப் போகக்கூடாது" என்று சீறினாள்.

"நான் பெல் அடிச்சேன், சார்... அம்மாதான் எங்கேயோ பார்த்துண்டு வந்தாங்க...."

"எங்கேயோ பார்த்துண்டா வந்தேன். உன் நல்ல மண்டையைப் பார்த்துண்டு வந்தேன்....." என்று பொருமினாள் அவள்.

"நீ போடா.... இன்னமே பார்த்து ஓட்டு....." என்ற ராஜா, "அவன் மேலே கோபிச்சுண்டு பிரயோசனமில்லே. மெள்ள நடவுங்கள். நடக்க முடிகிறதா?" என்று அவளுடன் சேர்ந்து பழையபடி பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தான்.

"உங்க உதவிக்கு ரொம்ப தாங்க்ஸ்."

இதுவரையில் அவளுடைய முகத்தை முழுதும் பாராமல், அவளுடைய உடம்பின் இளமை அள்ளிக் கொட்டிய பூரிப்பையே ரஸித்துக்கொண்டிருந்த ராஜா, "நான் என்ன ஹெல்ப் பண்ணிட்டேன். நீங்களே புடவையை இழுத்துக் கிழித்து எடுத்தீர்கள். உங்கள் செருப்பை எடுத்துக் கொடுத்ததைச் சொல்கிறீர்களா? அப்போ அது ஒரு ஹெல்ப் தான்......."

அவள் இலேசாகச் சிரித்தாள் அவனைப் பார்த்து.

அப்போதுதான் முதன் முதலாக அவளை முழுவதும் பார்த்தான் ராஜா. காலைச் சூரியனின் ஒளி அவள் முகத்திலே அடிக்க, அவள் சிறிதே தன் கண்களை இடுக்கிக் கொண்டிருந்தாள். அவளுடைய சிறு உதடுகள் குவிந்தபோது மிருதுவான கன்னங்களும் அவன் கண்களுக்குத் தெரிந்த அழகும் அவனை ஒரு கணம் அசைத்தன.

" நீங்கள் எங்கே போகணும் ?" என்று கேட்டான் அவன்.

அவனுடைய கேள்விக்கு உடனே பதிலை அளிக்காத அவள், திடீரென்று கடிகாரத்தைக் காதிலே வைத்துப் பார்த்தாள். ஒரு தடவை புடவைத் தலைப்பால் துடைத்தாள்.

"ஏன்..... என்ன ஆச்சு ?"

"கீழே விழுந்த போது கை தரையிலே இடிச்சுது...... வாட்சுக்கும் ஏதாவது ஆயிடுத்தோன்னு பார்க்கிறேன்."

"ஓடுகிறதா?"

"ஓடறதுன்னுதான் நினைக்கிறேன்." இரண்டாம் முறையாக அவள் வாட்சைக் காதோரத்தில் வைத்துக் கூர்ந்து கவனித்தாள்.

"எங்கே இப்படிக் கொடுங்கள், நான் பார்க்கிறேன்....."

"ஓடறதுன்னுதான் தோன்றுகிறது. வாங்கி ஆறு மாசம்கூட ஆகல்லே...." சொல்லிக் கொண்டே அதைக் கழற்றி அவனிடம் நீட்டினாள்.

ராஜா வாங்கும்போது, அவளுடைய விரல்கள், அவனுடைய மூன்று விரல்களோடு உராய்ந்ததை உணர்ந்தான். ஆனால் அவன் அந்த ஸ்பரிசத்தை உணர்ந்ததாகத் தெரியவில்லை.

"ஹை க்ளாஸ் வாட்ச்...." என்று முணு முணுத்த ராஜா, கைக்குட்டையால் இன்னும் ஒட்டிக் கொண்டிருந்த தூசியைத் துடைத்துவிட்டு, சாவியை இரண்டு தரம் முடுக்கினான். பிறகு காதிலே வைத்துப் பார்த்தான்.

"டாமேஜ் ஆகவில்லையே ?"

"கொஞ்சம்கூட ஆகவில்லை. நல்ல வேளையிலே வாங்கின வாட்சுதான்."

அவள் கைக் கடிகாரத்தைத் திரும்ப வாங்கி, கையில் கட்டிக் கொள்ளுகையில் ராஜா மீண்டும் கேட்டான் :

"நீங்கள் எங்கே போகணும்?"

"மயிலாப்பூருக்கு....."

"நானும் அங்கேதான் போறேன்.... டாக்ஸியில் கொண்டு விடட்டுமா?"

"வேண்டாம். தாங்க்ஸ்.... நான் பஸ்ஸிலேயே போய்க் கொள்கிறேன்."

சொன்னவள் பஸ் வருகிறதா என்று வலதுபுறமாகத் திரும்பி கண்ணுக் கெட்டிய தூரம் வரை பார்த்தாள்.

"ஒரு பஸ்ஸையும் காணோம்....."

"டயத்துக்கு அங்கேயிருந்து அனுப்பினாத்தானே இங்கே வரும்?"

"நீங்கள் டாக்ஸியில் போய்க் கொள்ளுங்கள்....."



## இறைவனும் அரசனும்

அரசன் ஒருவன் காட்டில் வேட்டையாடிக் களைப்புடன் அருகில் இருந்த குடிசை ஒன்றினுள் புகுந்தான். சிறிது தண்ணீர் குடித்துக் களைப்பைத் தீர்த்துக் கொண்டு வீட்டுக்காரக் கிழவனிடம், ''நாளை அரண்மனைக்குச் சென்று அரசனிடம் இந்த ஓலையைக் கொடுத்தால் நிறையப் பொன்னும் பொருளும் பெற்றுக் கொள்ளலாம்'' என்று சொல்லி ஒரு ஓலையைக் கொடுத்தான். மறுநாள் ஓலையுடன் அரண்மனைக்குச் சென்றான் கிழவன். அங்கு அரசன் இறைவன் முன்பு மண்டியிட்டு இறைஞ்சிக் கொண்டிருந்தான். இதைக் கண்டதும் கிழவனின் மனம் மாறிற்று. 'இவனே இறைவனிடம் இறைஞ்சும்போது நான் ஏன் இவனிடம் இறைஞ்ச வேண்டும். அந்த இறைவனிடமே நாம் நேரடியாக இறைஞ்சிக் கொள்வோம்' என்று கூறிக்கொண்டே வீட்டுக்குத் திரும்பி விட்டான்.

—ச. ஸ்ரீதரன்

---

''பரவாயில்லை. உங்களைப் பஸ்ஸில் ஏற்றிவிட்டுப் போய்க் கொள்கிறேன். ஆமாம்.... நீங்கள் அடையாறிலே எங்கே வேலையாக இருக்கிறீர்கள்?''

''நான் ஆபீஸுக்குப் போறவள்னு எப்படித் தெரியும்?''

''உங்கள் கட்டை விரலில் பேனா மசி தெரியறது. அடையாறிலே காலேஜும் இல்லை. இருந்தா காலேஜ் லெக்சரரா என்று கேட்டிருப்பேன்.''

சிரித்த அவன், ''நான் காந்திநகர் போஸ்டாபீஸிலே இருக்கேன்......'' என்றாள்.

''சிதம்பரம் எப்படி இருக்கார்? அவரைப் பார்த்துக் கொஞ்ச நாள் ஆகிறது......''

''சௌக்கியமாகத்தான் இருக்கிறார். அவரை உங்களுக்குத் தெரியுமா?''

''தெரியுமாவாவது! ராஜாங்கத்தை எவ்வளவு தூரத்துக்குத் தெரியும்னு கேட்டுப் பாருங்கள், சொல்லுவார்.'' ராஜா தன் பெயரை அவளுக்கு நாசூக்காகத் தெரிவித்தபின் மெதுவாக, ''உங்கள் பெயர்?'' என்று இழுத்தான்.

''அதோ, பஸ் வர்றது!'' என்ற அந்தப் பெண், ''என் பெயரா? என் பெயர் ஜானு!'' என்றாள்.

இதுவரையில் வாழ்க்கையில் எந்தப் பெண்ணையுமே நினைத்திராத அளவுக்கு அவன் ஜானுவைப் பற்றி நினைக்க ஆரம்பித்து விட்டான்.

**ப**ஸ்ஸை விட்டு இறங்கியதுமே ஜானு நேரே வீட்டுக்குப் போகாமல், டாக்டர் ஜயராமனுடைய க்ளினிக்கை நோக்கி நடந்தாள். செருப்புடன் நடப்பது கஷ்டமாக இருந்தது. முன்பின் தெரியாத ஒருவனுக்கு முன்னால் அவள் தனது வலியைக் காட்டிக் கொள்ளாமல், அதை அடக்க முடியுமளவுக்கு அடக்கியிருந்தாலும், இப்போது வலியின் கடுமையில் கண்களில் நீர் வந்தது. ஒரு விளக்குக் கம்பத்தைப் பிடித்துக் கொண்டு, வலது காலைச் சிறிது தூக்கி அடிபட்ட இடம் எப்படி இருக்கிறது என்று பார்த்தாள்.

பெரு விரலின் கீழ்ப் பாகத்தில் தோல் பிய்ந்து, ரத்தம் கட்டிப் போயிருந்தது. அடிவாயில் சிறு சிறு மணல்கள் எல்லை கட்டி நின்றன. சுற்றிலும் ஒரு நீல நிறம். லேசாகத் தொட்டுப் பார்த்தாள். துடிக்கும் வலி. புறங்காலிலும், கணுக்காலிலும் சற்று மேலாகவும் வேறு வலி இருந்தது. புறங்காலில் இலேசான சிராய்ப்பு நகங்கிவிட்ட ரோமக் கால்களின்மீது ரத்தத்தை அங்கங்கே பூசிவிட்டாற் போலக் காட்டியது.

க்ளினிக்கில் டாக்டர் இன்னும் வரவில்லை. கம்பவுண்டர் நாயர் இருந்தான்.

''நாயர்..... இதைக் கொஞ்சம் பார்த்து ஒரு பாண்டேஜ் போட்டு விடேன்!'' என்ற அவள், செருப்பை உதறிப் போட்டுவிட்டுப் பெஞ்சியில் உட்கார்ந்தாள். தனியாக அச்செருப்பு கிடப்பதைப் பார்த்ததும், அவளையும் மீறி அந்த ராஜாங்கம் மனக்கண்ணில் தோன்றினான்.

''எப்படிம்மா அடிபட்டது....?'' கேட்டுக் கொண்டே நாயர் இடது கையால் அவளுடைய பெரு விரலை இலேசாக அழுத்தினான்.

''ஐயோ, நாயர்! வலிக்கிறதே. மெதுவாக மெதுவாக'' என்று முனகினாள்.

நாயர் சிரித்தான். அவனுடைய பொக்கை வாயிலிருந்து அவனுடைய நாக்கு பற்களுக்குப் பதிலாக, அந்த வேலையை எடுத்துக் கொண்டு நீட்டிச் சிரிப்பது போல இருந்தது ஜானுவுக்கு. ''எனக்குப் பிராணன் போகிற வலியாயிருக்கு. நீ சிரிக்கிறையாக்கும்......'' என்றாள்.

நாயர் அவளை லட்சியம் செய்யாமல் பஞ்சை நீரில் தோய்த்தெடுத்துக் கொண்டு, அடிபட்ட இடத்தைச் சுத்தம் செய்யலானான்.

''ஐயோ.....''

''ஏம்மா, புடவைக் கரை கிழிஞ்சிருக்கே..... எங்கே மாட்டிண்டது?''

திட்டமிட்ட வெற்றிக்குக் கட்டமிட்ட ஆடை. கவர்ந்திழுக்கும் கட்டங்கள். பளிச்சென்ற தெளிவு. நறுக்கென்று கேட்கும் தோரணை. வீராவேசத் துள்ளல். எங்கே? துணிவோடு அணியுங்கள் பார்ப்போம். இது போன்ற கட்டங்களை உங்களைப் போன்ற ஒரு ஆண் மகன் அணிந்தால்...அடடா, எப்படித்தான் இருக்கும்.



# மபத்லால் க்ரூப்

## பாப்ளின்கள் மற்றும் ஷர்ட்டிங்குகள்

2x2 'டெரீன்'/காட்டன், பிரிண்டெட், 'டெபிலேஸ்டு' 'ம:பிளேஸ்டு' மற்றும் ஸ்ட்ரெச் ரகங்கள்.

நியு ஷோரக், (ஷோரக்) அகமதாபாத், நியு ஷோரக், நடியாத், ஸ்டாண்டர்ட், பம்பாய், ஸ்டாண்டர்ட், (நியு சைனா) பம்பாய், ஸ்டாண்டர்ட், தேவாஸ், ஸாஸுன், பம்பாய், ஸாஸுன் (நியு யூனியன்) பம்பாய் ஸூரத் காட்டன், ஸூரத், மபத்லால் பைன், நவ்ஸாரி, மிஹிர் டெக்ஸ்டைல்ஸ், அகமதாபாத்

"நாயர்... நாயர்... ரொம்ப அழுத்தித் துடைக்காதே.....!"

"ரொம்ப தூசி சேர்ந்திருக்கு..... தோலும் வழண்டுடிச்சி....சைக்கிள்ளே புடவை மாட்டிடுச்சா?"

கண்களில் நீர் மல்க ஜானு, "ஆமாம்" என்று தலை அசைத்தாள். சிறிய கத்திரிக்கோலால் நாயர் பிய்ந்துவிட்ட தோலைக் கத்திரித்த போது, ஜானுவின் அலறல் 'அந்த அறையையே இரண்டாக்கியது. அப்புறம் அவன் டிங்க்சர் பென்ஸாயினைப் போட்ட போது அவளால் கத்தக்கூட முடியவில்லை.. வலியின் வேதனையில் கண்ணீர் பெருகியது.

ஒரு கொத்துப் பஞ்சை வைத்துவிட்டு, நாயர் பாண்டேஜ் துணியால் மூடிக் கட்டினான்.

எட்டணாவை அவன் கையிலே கொடுத்து விட்டு, "நாளைக்கும் வரணுமா?" என்று கேட்டாள் ஜானு.

"சாயந்திரமா இந்நேரத்துக்கு வா."

அவளுடைய 'ஆக்ஸிடெண்ட்' வீட்டுக்குப் போனதும் ரயில், விமான விபத்துக்களின் சொரூபமாக விசுவரூபமெடுத்தது.

"ரொம்ப வலிக்கிறதா, பெரிசா அடிபட்டுடுத்தா?" என்று நிமிஷத்துக்கொரு தடவை அம்மா கேட்டு, விதியை வழக்கம் போல் நொந்து கொண்டாள்.

"அப்பப்பா.... என்னமா வலிக்குது அந்த நாயர் பிடிச்சு அமுக்கினப்போ!" என்று ஜானு அந்த வலியை நினைத்துக் கொண்டு மீண்டும் ஒரு தடவை அநுபவித்தாள்.

"ரோடிலே பார்த்து நடக்கணும்!" என்றாள் கமலா.

"உனக்கு வந்தா தெரியும்?"-ஜானு கறுவினாள்.

"எனக்கு வராது. நான் ரோடை க்ராஸ் பண்ற போது ரெண்டு பக்கத்தையும் பார்த்துண்டுதான் நடப்பேன்..... வைக்கோல் வண்டி வந்தாக்கூட அது முதல்லே போகட்டும்னு வெயிட் பண்ணுவேன்...."

கமலாவின் சிரிப்பும் நையாண்டியும் வேறு அவளுடைய ஆத்திரத்தை அதிகமாக்கியது.

"அதைச் செய்து விடுவேன், இதைக் கிழிச்சுப்புடுவேன் என்கிற ஜம்பத்துக்குக் குறைச்சல் இல்லே. எங்கேயோ, ஒரு வாண்டுப் பயல் ஓட்டி வந்த சைக்கிள் மோதிடுத்தாம். அதைச் சகிச்சுக்க முடியாம ஒப்பாரி வைக்கிறு!"

இடது காலை மட்டும் அலம்பின ஜானு கமலாவுடன் நேரம் வரும்போது பேசிக் கொள்ளலாம் என்று வாய் மூடிக்கொண்டிருந்துவிட்டாள்.

அன்றிரவு காலின் வலியைவிட, ராஜாங்கத்தின் நினைவே அவளுள் நீண்ட நேரம் நின்றிருந்தது. அவள் எத்தனையோ வாலிபர்களை பஸ்ஸிலும் சினிமாத் தியேட்டரிலும் தெருவிலும் பார்த்திருந்தாலும், இந்த ராஜாங்கத்திடம் ஏதோ ஓர் அலாதித் தன்மை இருப்பதாகப் பட்டது. இயற்கையான ஆணவமும் அதற்கேற்ப ஒரு கம்பீரமும் அவனுடைய நடையிலும் பேச்சிலும் இருப்பதை அவள் உணர்ந்தாள். எத்தனையோ பேர்களைப் போல் அவன் குழையவுமில்லை. அதற்காக, 'காலரை'த் தூக்கிவிட்டு ஒரு கர்வத்தைக் காட்டும் இந்தக் காலத்துப் பையன்களைப் போல் நிற்கவும் இல்லை. அவன் செய்த உதவி, சைக்கிளைப் பிடித்து நிறுத்தியதும், நடுத் தெருவில் கிடந்த செருப்பை எடுத்து அவள் காலடியில் போட்டதும்தான். இதை அவன் ஓர் அலட்சிய பாவத்துடன் செய்தது போலப் பட்டாலும், அந்த அலட்சியமே ஜானுவுக்குப் புதுமையாக இருந்தது. 'நானும் மயிலாப்பூருக்குத்தான் போகிறேன்..... டாக்ஸியில் உங்களைக் கொண்டு போய் விடுகிறேன்' என்றதற்கு அவள் மறுப்புத் தெரிவித்தாள். ஆனால் அதனால் அவனுடைய முகம் கறுத்துச் சுருங்கிவிடவில்லை. அதற்கு மாறாக அவனுடைய உதடுகளில் புன்னகைதான் அரும்பி நின்றது. போஸ்ட்மாஸ்டர் சிதம்பரத்தைப் பற்றி விசாரித்த தோரணையிலிருந்து அவரும் அவனும் ரொம்ப நெருங்கிப் பழகுகிறவர்களாக இருக்க வேண்டுமென்று ஜானு நினைத்தாள். அவனுடைய பெயரை அவன் கேட்டவிதமே ஒரு மனஸ்தாபத்தைக் கூட எழுப்பியது. 'ஆமாம்.... உங்கள் பெயர்?' என்று இழுக்க அல்லவா செய்தான்? அவனுடைய அந்த அலட்சியம் 'சுருக்'கென்று அப்போதே மனத்தில் பட்டதால்தான் உடனேயே அவள் பதில் சொல்லவில்லை. 'எனக்கு உன் பெயர் தெரிந்து ஒன்றும் ஆக வேண்டியதில்லை; இருந்தாலும் கேட்கிறேன்' என்ற பாவம் அல்லவா தொனித்தது?

இதுவரை எவனைப் பற்றியுமே மனத்தில் அரை விநாடிக்கு மேல் தன்னுடன் இணைத்துப் பார்த்தறியாத ஜானு, ராஜாங்கம் அவளையும் மீறி அவளுள்ளே தங்கியிருப்பதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தாள். இடையிடையே மனத்தின் சிலிர்ப்பில் ஓர் இன்ப வேதனை உண்டாவதையும் உணர்ந்தாள். (தொடரும்)



## வீட்டை அழகுபடுத்த ஸில்விக்ரீட்

# ஏஸிஸியின் வெள்ளை ஸிமெண்ட்

உங்கள் வீட்டையும் சுற்றுப்புறத்தையும் வண்ண அழகுடன் விளங்கச் செய்ய இதோ ஸில்விக்ரீட்: ஏஸிஸியின் வெள்ளை ஸிமெண்ட்!

ஸில்விக்ரீட் கொண்டு வீட்டுக்குள் ஒரே வண்ணத்திலோ பலவண்ணங்களிலோ 'டெர்ராஸோ' பாணியில் தரை, மாடிப்படிகள் முதலியன கட்டினால் கவர்ச்சிகரமாயிருக்கும்.

வீட்டுக்கு வெளியில் ஸில்விக்ரீட் கொண்டு வண்ணத் தரை, மறைவுக்காக கண்கவர் டிசைன்களில்-தட்டிபோல சுவர், தோட்டத்தில் போடும் பெஞ்சுகள், மலர்ச் செடிகளை வளர்க்கும் ஜாடிகள் முதலியன கட்டினால் உங்கள் வீடும் கம்பவுண்டும் கலையழகுடன் சோபிக்கும்!

CMI-5676A

ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆ:ப் இந்தியா லிமிட்டெடின் உங்களுக்கருகில் உள்ள கிளையிலிருந்தும், கம்பெனியின் டிஸ்ட்ரிப்யூட்டர்களிடமிருந்தும் ஸில்விக்ரீட் எளிதில் கிடைக்கும். 'ஸ்னோஸெம்' மற்றும் 'கலர்க்ரீட்' தயாரிப்பதில் ஸில்விக்ரீட்தான் முக்கிய பொருள்.

*தி அஸோஸியேட்டெட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிட்டெட்*

*தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆ:ப் இந்தியா லிமிட்டெட்*

ஸில்விக்ரீட்
ஏஸிஸியின்
வெள்ளை
ஸிமெண்ட்

# நெஞ்சக் கிளர்ச்சி

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

தெருக் கோடியில் கோபுர விளக்குகள் நாகக் கண்களாக மின்னின. மின் செதில்களாய் மேகத் துணுக்குகள். நிலா சிரித்துக் கொண்டிருந்தது.

கண்களை மூடிச் சிறு பிரார்த்தனை செய்துவிட்டு ராஜி கடைசி விளக்கை அணைத்தாள். புடைவை மடிப்பில் தாங்கும் தாலியை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். தலையணையில் தலை அழுந்திற்று.

குழந்தைகள் தூங்கிவிட்டார்கள். சாருவுக்குக் கனவுகளைச் சொல்ல வயதாகவில்லை. விஜி என்ன கனவு கண்டுகொண்டிருப்பாள்? புதுப் பாவாடை, விளையாட்டுப் பொருள்கள், பண்டிகை நாள். இப்படி ஏதேனும் அவள் மனத்தை நிறைத்துக் கொண்டிருக்கும்.

ஜன்னலுக்கு வெளியே வானில் வெள்ளி ரதம் ஒன்று மேக உருவில் ஊர்ந்துகொண்டிருந்தது. பிடரி மயிர் அலையப்பாயும் குதிரைகளெனக் கொழுத்துத் திரண்ட மேகங்கள். புரூதி தோகை தோகையாக எழும்புவது போன்ற தோற்றம். அவளுக்கு அப்படி ஒன்று கிடைத்தால் இந்நேரம் போயிருப்பாள். ஒரு கணமேனும் கணவனை, தூங்கும் அம்முகத்தையேனும் பார்த்து விட்டுத் திரும்பி விருப்பாள்.

அன்று விஜி பள்ளிக்கூடத்திலிருந்து கால் பரீட்சை மார்க்குகளைப் பதிவு செய்த கார்டை எடுத்துக் கொண்டு வந்தாள். அவளிடம் அதை நீட்டும்போதே கண்களில் ஒரு பெருமை. குழந்தையை முதுகில் தட்டிக் கொடுத்தாள் ராஜி. நிறைய மார்க்குகள் வாங்கி இருந்தாள் விஜி. ஆனால் அதை உணர்ந்து பெருமைப் பட்டுக் கொள்ளக் கூட இன்னும் வயதாகவில்லை; கார்டில் அம்மா கையெழுத்துப் போடுவதைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"அம்மா, எல்லோரும் அப்பா கிட்டே கையெழுத்து வாங்கிண்டு வராளே? நீ மட்டும்—" ஓர் ஆழ்ந்த யோசனையில் குழந்தையின் குரல் தாழ்ந்தது.

"உன்னுடைய அப்பா வேறே ஊரில் இருக்கிறாரோ இல்லியோ? அதனால்தான் நானே போட்டுக் கொடுக்கிறேன்."

"அப்பா எப்போ வருவார் அம்மா?"

எப்போது வருவார்? அவளுக்கே தெரியாது. அப்போது அங்கே இருந்திருந்தால் குழந்தையைத் தூக்கிக் கொண்டு எவ்வளவோ பெருமைப் பட்டிருப்பார். இப்போது, இந்த நேரம் எந்த ஹோட்டலில், சத்திரத்தில், எந்தக் கூரையை அண்ணாந்து பார்த்தபடி என்ன யோசனை செய்துகொண்டிருக்கிறாரோ? அவளும் புழுங்கிக் கொண்டிருக்கிறாள். ஆறு மாதங்களுக்கு முன் வந்து போன நினைவை மீண்டும் மீண்டும் புதுப்பித்துத் தேற்றிக் கொள்ளுகிறாள். ஆதரவான அணைப்பின் ஆறுதல், ஒவ்வொன்றும் நினைவின் பொக்கிஷமாகத் தோன்றுகிறது.

பேச்சை மாற்றி, விஜியை உள்ளே அழைத்துக்கொண்டு போய் விட்டாள் ராஜி. ஆனால் நினைவு மாறவில்லை. நினைக்க நினைக்க ஏக்கம் அதிகரித்துக் கொண்டே போயிற்று. இப்படி மிகுந்து உயர்ந்து அடங்காமல் போகும் போது ரகுவுக்குக் கடிதத்தில் மனத்தைக் கொட்டி எழுதுவாள். அவன் எப்படியோ லீவு எடுத்துக் கொண்டு வருவான். அப்போதும், வந்த சுருக்கில் திரும்பிப் போய் விடுவான். அப்புறம் ஒரு வாரத்துக்குக் குழந்தைகள் தேடிக்கொண்டிருக்கும்.

அவர்கள் வாழ்க்கை தொடங்கிய புதிதில் அவன் உள்ளூரிலேயே ஒரு சிறு வேலையில் இருந்தான். ரயில் வண்டி அட்டவணையைப் போல வேலை நேரம். நாளைக்கு இந்நேரம் என்ன செய்து கொண்டிருப்பான் என்று இன்றைக்கே எழுதிக் கொடுக்கலாம். வருவாய் குறைவாக இருந்தாலும் அவளுக்குத் திருப்தியாகத்தான் இருந்தது. அவனுக்குத்தான் அந்தச் சுவடு விழுந்த வாழ்க்கை பிடிக்கவில்லை. அப்புறம்தான் இந்த வேலை கிடைத்தது. வடக்கே ஒரு கம்பெனி; ஊர் சுற்றும் வேலை.

அப்போது விஜி பிறந்தாயிற்று. ரவியைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து விட்டான். குடும்பத்தை வடக்கே அழைத்துக்கொண்டு போக அவனுக்கு இஷ்டமில்லை. அவனுடைய சுற்றித் திரியும் வாழ்க்கையிலும் அவளால் பங்கு பெற முடியாது. அப்போது தொடங்கிய தனிமைதான் இது. வெளிப் பொறுப்புக்கள் அவனுடையவை. வீட்டின் பொறுப்புக்கள் அனைத்தும் அவள்மேல் விழுந்து விட்டன. சில சமயம் தோன்றும் - இந்த வீட்டுச் சிறையில் அலுப்பு, அந்த வெளி அலைச்சலில் இருக்காதோ என்று. எப்படிச் சொல்ல முடியும்? இரண்டிலும்தான் சுதந்திரம் இல்லை. கால் ஊன்றக்கூட ஆதாரம் இல்லாமல், அந்தரத்தில் வசித்துக் கொண்டிருக்கிறார்கள் இருவருமே.

கணவனின் வேலைகள் அனைத்தும் அவளைச் சார்ந்துவிட்டது. மாத முதலில் இன்ஷ்யூர் கவரில் பணம் வந்து சேரும். அப்போதே வழக்கமான கடமைகளின் வரிசையும் தொடங்கிவிடும். குடித்தனச் செலவுக்குத் திட்டம், தீர்க்க வேண்டிய மாதாந்தரக்

கணக்குகள், குழந்தைகளின் படிப்பு; அவர்களுடைய மற்றச் செலவுகள், எல்லாவற்றையும் வகுத்து, செலவு கைமீறி விடாமல் சமாளிக்கப் பொழுது சரியாக இருக்கும். கிராமத்து வீட்டிலிருந்தும், கையகல நிலத்திலிருந்தும் வரும் துளித் துளியாகச் சேரும் வருமானங்களை ஒன்று திரட்டி வருடத்துக்கு ஒரு முறை இன்ஷ்யூரன்ஸ் பிரீமியம் கட்டுவது, வீட்டு நிர்வாகத்துக்காக ரேஷன், மின்சார ஆபீஸ், பாங்கி, கடை என்று அலைவது, முக்கியமான கடிதங்களுக்குப் பதில் எழுதுவது — எல்லாம் அவள் பொறுப்புத்தான். அதன் சுமையில் சில சமயம் அலுத்துப்போய் உட்கார்ந்து விடுவாள்.

கணவன் வந்ததும், ''என் தலையில் இவ்வளவையும் கட்டிவிட்டு, நீங்கள் நிம்மதியாக இருக்கிறீர்களே? இவ்வளவு வேலையும் செய்வதற்கு என்ன கொடுக்கிறீர்கள்?'' என்று கேட்பாள்.

''இதோ!'' என்று அவளை முகம் நெருங்க அருகே இழுத்துக் கொள்வான் ரகு. அந்த நேரத்தில் அவள் அங்கலாய்ப்பெல்லாம் நழுவி மறைந்து போகும். கனத்துத் தொங்கிய வாரங்களும், மாதங்களும் அந்தக் கண நேர மகிழ்ச்சியில் உருவிழந்து விடும்.

தூங்கிக் கொண்டிருந்த குழந்தை சாருவின் கை அவள் மேல் விழுந்தது. தூக்கத்தில் ஏதோ முனகல். அவளுடைய நினைவின் குரல் அடங்கி விட்டது. ஏதோ ஓர் ஆறுதல் தேடும் பாவனையில் குழந்தையை அணைத்துக் கட்டிக் கொண்டாள்.

பள்ளிக்கூடத்திலிருந்து திரும்பிய ரவி நேரே வீட்டுக்குத் திரும்ப வில்லை. நடைக்கேற்பத் தோளில் 'பெண்டுலம்' போல ஆடும் பையுடன் எதிர் வீட்டு வாசலில் தங்கி விட்டான்; எதிர் வீட்டு வாசலில் புதுக் கார்; 'சரிகமபதநி' என்று ராகம் பாடும் புது 'ஹாரன்'. அதை வேடிக்கை பார்க்க அங்கே ஒரு கூட்டம் முளைத்திருந்தது.

கால் மணி நேரம் வண்டிக் குதிரையைப் போலக் கால் மாற்றி, கால் நின்று பார்த்து, அலுத்து ஓய்ந்து போன பிறகு வீட்டுக்கு வந்தான் ரவி. அவன் முகம் வற்றலாகச் சுணங்கி யிருந்தது. அவளுக்குக் காரணம் தெரியும். அதனால்தான் கேட்கத் தயக்கமாக இருந்தது. அன்று பஸ் கிடைக்கவில்லை. அவன் நடந்தே வந்திருப்பான். வெகு நாட்களாக அவனும் கேட்டுக் கொண்டிருக்கிறான், ஒரு சைக்கிள் வேண்டுமென. அதற்குக் கைவந்தபாடில்லை; எதிர் வீட்டுப் பையன் தந்தையோடு 'ஜம்'மென்று புதுக் காரில் உட்கார்ந்துகொண்டு போகிறான். ரவிக்குச் சைக்கிள் வாங்க வழியில்லை. சொல்லிக் கொள்ள, சண்டை போட்டுப் பிடிவாதம் பிடிக்கத் தந்தையும்கூடக் கண்களில் படுவதில்லை.

தொண்டை கிழியக் கத்துவான். பாத்திரங்கள் உருளும். கடைக்குப் போக மாட்டேன் என்று விருப்புச் செய்வான். காப்பியைக் கொட்டிவிட்டுக் கைக்கு அகப்படாமல் ஓடிவிடுவான். பிறகு சாயங்காலம் பிறிதொரு சாக்கில் வரவும் உதையும் வாங்கிக் கொள்வான். ஆனால் அப்போதெல்லாம் ஒரு சிணுக்கம், முக வாட்டம், பொருமல்— இவற்றோடு சரி. அவளுக்குத் தெரியாமல் அறையில் உட்கார்ந்து கொண்டு புத்தக விரிப்பைக் கைவிரல்கள் அழுக்குவதைப் போல மனத்தில் எதையோ அழுத்திக் கொண்டு, முகம் நெருப்பில் காய்ந்த அப்பளம் போல வதங்கி நசுங்க, உதட்டைப் பிதுக்கி விக்கி விக்கி அழுவான். ''என்னடா?'' என்று கேட்டால் சொல்ல மாட்டான். அந்த ஆறுதலைத் தருவதற்கு அவன் தந்தையால் தான் முடியுமோ? 'நீ ஒரு புருஷப் பையன்' என்று கிண்டலாய் முதுகில் தட்டி அவன் நெஞ்சை நிமிர்த்துவதற்கு ஒரு ஆண் மகன் தான் தேவையோ? அப்படி நினைக்கும்போது கையாலாகாத விதமாய் நெஞ்சில் சிறு வேதனையின் குறுகுறுப்பு எழுந்து அடங்கும்.

அன்று கைக் காரியமும் யோசனையுமாக நடந்து கொண்டிருந்தவளின் காதில் கொஞ்ச நாட்களாகவே எதிர் பார்த்துக் கொண்டிருந்த அந்தக் குரல் விழுந்தது.

''போஸ்ட்!''

அந்தக் கூவல் அவளைக் கட்டியிருந்த மந்திரத்தை அவிழ்த்தது போல இருந்தது. கடிதம் அவரிடமிருந்துதான் இருக்கும். கவரின் மேல் கையெழுத்தைப் பார்த்ததும் முகம் ஒளிவிட்டது. அதை வாங்கிக்கொண்டவள் நேரே அப்படியே உள்ளே போய் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டாள். பின்னும் முன்னும் திரும்பிப் பார்த்துவிட்டு உடைத்தாள். போன கடிதத்திலேயே எத்தனையோ ஏங்கிக் கொண்டு எழுதியிருந்ததற்குப் பதில் இது. விழிகள் முன்னுக்கும் பின்னுக்குமாக வரிகளின் மேல் ஓடி அவைகளின் அர்த்தத்தைப் பருகுகையில் அவளை அறியாமலேயே கண்களில் பசுமை படர்ந்து, எழுத்துக்கள் மங்கி நழுவின.

ரகு வரப்போகிறான். சாவகாசமாகக் கொஞ்ச நாட்கள் அங்கே இருக்கவும் போகிறான். உடனே திரும்ப வேண்டிய அவசரம் இல்லை....

குழந்தைகளுக்கு ஒரே கொண்டாட்டம். வந்ததிலிருந்து சாரு அவர் மடியைப் பிடித்துக் கொண்டவள்தான்; கீழே இறங்கவேயில்லை.

''அப்பா!'' என்று சிறகுகள் போலக் கைகளை விரித்துக் கொண்டு ஓடிவந்து அந்த அணைப்புக்குள், வண்டியிலிருந்து இறங்கச் சாவகாசமில்லாமல் புகுந்துகொண்டான் விஜி. ரவிக்குத்தான் கொஞ்சம் வெட்கம். முன்னால் குனிந்த தலை நிமிராமல், பெட்டியைத் தூக்க மாட்டாமல் தூக்கி உள்ளே கொண்டுபோய் வைத்தான்.

ராஜி அவன் புறம் வைத்த பார்வை மாறாமல் நின்றாள். அப்படியே கண்களால் விழுங்கி, விழிகளுள் வாங்கிக்கொண்டு விடுவது போல ஒரு பாவனை. அத்தனை நாட்களாகக் கண்ணால் பார்க்காத தாகமா அது? கைகழுவத் தண்ணீர் எடுத்துக் கொடுக்கும்போது அந்த விரல்களைப் பற்றிக் கொள்ள வேண்டும் போல, சாய்வு நாற்காலியில் சாய்ந்திருந்தபோது வெற்றிலை



களையான
உடையழகோடு
நீங்கள்
காலமெல்லாம்
திகழவே

# தாக்கர்ஸியின்
# everfresh

மினிப் பாவாடை அழகி,
கூட ஒரு மிடுக்கான இளைஞன்...
அமர்க்களமான ஜோடி. அணிந்திடும்
ஆடையோ 'எவர்ஃப்ரெஷ்' (67%
டெரீன், 33% பருத்தி) துணிகள்:
கசங்கவோ, கலங்கவோ வொண்ணாதவை...எழில் மாறாப் புதுமையோடு
இரவெல்லாம் நிலைபெறுபவை.

தனி, சுருங்காத தன்மைக்கு [illegible]
**TEBILIZED**
முத்திரையிட்ட 100% பருத்தித் துணிகள்,
அதோடு பலதரப்பட்ட ஷர்ட்டிங்,
சூட்டிங், ஸ்கிரீன் பிரிண்டு, பாப்ளின்,
வாயில், கேம்ப்ரிக், சித்திர தையல்
துணி, மெத்தையுறைத் துணி
வகைகள்.

**தி ஹிந்துஸ்தான் ஸ்பி. & வீவிங் மில்ஸ் கோ., லிட்.,**
**தி இந்தியன் மானு. கோ., லிட்.,**
16, அப்போலோ ஸ்ட்ரீட், பம்பாய்-1.

**தாக்கர்ஸி க்ரூப்**
நேர்த்தியான பருத்தித்
துணிகளைத் தயாரிப்போர்!

யைக் கொண்டு வந்து வைக்கும் வேளையில் கன்னத்தை லேசாய் அந்தத் தோளில் தேய்த்துக்கொள்ள வேணும்போல, குழந்தைகள் கண் மறைவாகப் போன நேரத்தில் கை வீச்சில் பிடிபட்ட வளைக் கைகளை அழுத்தும் பிடியில் அப்படியே சிக்குண்டு தோய்ந்துவிட வேண்டும் போல, இது என்ன ஏக்கம்? அந்த நிமுதும் சில சமயங்களில் மேலே நட்டுகையில் எழும் கதகதப்பு. அவர்களை உண்டாக்கிக் கொண்ட நெருப்பு, விளைவித்துக் கொண்ட பிரிவின் வேகம், அவர்களையே காய்ச்சித் தவிக்க விடுகிறதா?

எங்கிருந்தோ ஒரு ஸ்கூட்டரை இரவல் வாங்கிக் கொண்டு வந்தாயிற்று. ரவி இரு வேளைகளிலும் அதில்தான் தந்தையுடன் சவாரி. வீட்டு வேலைக்கு ஒரு தடவை வெளியே போய் வர முனகும் பையன். இப்போது இரண்டு வேளையும் கையில் பையும், பென்சிலில் ஒரு குறிப்பு எழுதின துண்டுச் சீட்டுமாக வாசலுக்குத் தாவிக் கொண்டிருந்தான். ''அப்பா எனக்கு இது புரியவில்லை'' என்று அவன் அநேகம் தடவையாகச் சொல்லிக் கொடுத்த அதே பாடத்தை மறுபடியும் தந்தையின் மடியில் கொண்டு வந்து விரித்துவிட்டு, பேச விடாமல் புகுந்து கொள்கிற தோரணையிலும் அந்த உரிமை கொண்டாடுகிற திருப்திதான்.

விஜிக்கு 'ஹோட்டல்' என்றால் கொண்டாட்டம். அவள் அதிகம் பார்த்திராத இடம் அது. தாயுடன் போகமுடியாத இடம். எல்லோருமாகத் திறந்த வெளி ஹோட்டலில் மர நிழலில் நாற்காலி வரிசைகளில் உட்காரப்போனபோது அவள் மகிழ்ச்சிக்குக் கங்கு கரையே இல்லை.

குழந்தைகள் பள்ளிக்கூடத்துக்குப் போன பிறகு பிற்பகல் ஓய்வுப் பொழுதில் பள்ளிக்கூட மணியடிப்பது மறந்து கணவனுடன் பேசிக் கொண்டேயிருப்பாள் ராஜி.

''எங்களையெல்லாம் விட்டு விட்டு— என்னை அடியோடு மறந்து விட்டு — எப்படி இருக்க முடிகிறது உங்களால்?'' என்று கேட்பாள். தன்னைச் சுற்றி அணைத்த கையை அலட்சியமாக எடுத்து வீசிக் கொண்டு கண்ணை மூடியபடி அவன் தலையை அசைப்பான். ''உனக்கு உன் ராஜ்யம்; எனக்கு என் உலகம்.''

''எந்த ராஜ்யமும் உலகத்துக்குள்ளே அடங்கினதுதான். தெரியுமோ இல்லையோ?'' என்று அவள் உரிமையாக அவன் மார்பின் மேல் சாய்ந்து கொள்வாள். அவன் பெருமூச்சின் கோடு அவள் நெஞ்சின் கீறலாய் விழும். விளையாட்டாய் நெருடும் விரல்களில் நக வளைவு அழுந்துவது போன்ற வேதனை. அவன் எதையோ சொல்ல வந்து, சொல்ல முடியாமல் விழுங்கிக் கொள்வதைப் போலத் தவிப்பான். குழந்தைச் சிரிப்பாகச் சீண்டு பவனின் முகத்தில் திடீரென்று ஒரு அலுப்பு மருள் காட்டும். ஆனால் அவள் அடையாளம் கண்டுகொள்ளு முன் மறைந்து விடும். அவரவர் யோசனைகளின் படலங்கள் அவரவர்களை மூடியதில் பேச்சு சற்றே மறைந்துபோகும்.

அவனுக்குப் பிடித்தவைகளாகப் பார்த்துப் பார்த்துச் சமைப்பாள். நாவின் ருசி மட்டுமல்ல; நினைவின் ருசியும் கூடத்தான். அவன் ருசிகளை அறிந்துகொள்ளப் பழகிய ஆரம்ப நாட்களின் நினைவு. அப்புறம் குழந்தைகளுக்காக அவைகளைச் செய்து போட்டபோது நெஞ்சில் வேதனைகளாகச் சிக்கிக்கொள்ளும்



அவனுடைய நினைவு. பிரிவில் பித்தமாகக் கசக்கும் அந்த நிலை.

நினைவின் ருசி மட்டும் அல்ல; சொல் ருசியும் கூடத்தான். "என்ன இருந்தாலும் ராஜி, உன் கையால் சமையல் செய்தால் அந்த ருசியே தனிதான்" என்று விரல்கள் வழியே வழியும் உணர்வின் இனிப்பைப் போல, வார்த்தைகளில் சொட்டும் சுவையின் இன்பமும்தான். புறங்கை மறிக்க மறிக்க, போதுமென்று அலுத்துப் போகும்படி, வழிய வழிய, இலையில் சரிய சரிய, கவிழ்க்கும் போது மனத்தில் ததும்பி வழியும் நிறைவு தான். முகமும் உணர்வும் பார்த்துக் கூட இருந்து பரிமாற முடியாமல் போய்விட்ட தாபத்தை ஆவல் தீரத் தணித்துக்கொள்வதைப் போல.

ஒரு வாரம்.

ஒரு மாதம்.

இரவு வேளை. கேட்க வேண்டாமென்று நினைத்து நினைத்து அடங்கிய அந்தக் கேள்வி அவள் நாவிலிருந்து நழுவி விழுந்து விட்டது.

"நீங்கள் எப்போது திரும்ப வேண்டும்?"

"நானா..." குரல் இழுக்க திரி மாதிரி சிந்தனையில் மங்கிற்று. ஆனாலும் முகத்தில் ஒரு சஞ்சலம் படமாடுவது புரிவது போன்ற உணர்வு.

"லீவைக் கூட்டப் போகிறீர்களா?"

"இல்லை..."

"பின்னே?" பதிலை வெளியே இழுப்பது போல அவள் கைகள் அவனைச் சுற்றி இறுகின.

"நான் எப்போது திரும்புவேன் என்று சொல்ல முடியாது. வேலையை விட்டு விட்டேன்."

தெறித்தாற்போல அவள் பிடி சடாடென்று விலகிற்று.

"வந்ததும் உன்னிடம் சொல்லி இந்தச் சந்தோஷத்தைக் கெடுக்க வேண்டாமென்று இருந்தேன். எத்தனையோ நாட்களுக்கப்புறம் பார்த்துக் கொள்கிறோம்..."

அவன் குழந்தையைப் போல லேசாகிப் போனான். அவன் ஆறுதலுக்காக ஏங்கும் ஏக்கம். அவள் தன்புறமாக அவன் கையை எடுத்துக் கொண்டு அணைத்துக்கொண்டாள். அவள் குரலும் குழைந்தது.

"வருத்தப்படாதீர்கள். ஏதோ போதாத வேளை..."

குழந்தைகள் ஒன்றுக்கொன்று கதை சொல்லித் தூங்கச் செய்து கொள்வது போல, ஆதரவான பேச்சுக்கள், மெத்து மெத்தென்ற குரலில் கலந்து உருவிழந்தன.

இன்னும் ஒரு மாதம்.

குழந்தைகளுக்குத் தெரியாமல் செலவைக் குறைக்க ஆரம்பித்து விட்டாள். இனி முதல் தேதி பாங்கில் போட 'செக்' வராது. போன மாதம்தான் சேர்த்திருந்த பணத்தைக் கூடுதலான வட்டிக்கு, நீண்ட நாள் எடுபடாதபடி போடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்தாள். இப்போது அந்த யோசனைக்கே இடம் இல்லை.

குழந்தைகளின் சட்டைகளைக் கூட, அவர்கள் முனு முனுப்பைப் பொருட்படுத்த முடியாமல் தைத்துச் சரிசெய்து போடுவாள். விஜி பழைய சட்டையை முகத்தில் வீசி எறியும்போது அந்த வார்த்தைகளைச் சொல்லி விடத் துடிக்கும். வலிந்து தன்னை எப்படியோ அடக்கி கொண்டு விடுவாள். ரவி பழைய புத்தகங்களைத்தான் 'பைண்ட்' செய்து வைத்துக் கொண்டான். நோட்ஸ் கூட யாரோ கொடுத்ததுதான். அவனுக்குத் தாயின் சிக்கனம் புரியவில்லை. ஆனால் அதற்கு ஏதோ அர்த்தம் இருக்கிறதென்று ஒரு அரை குறையான உணர்வு, பாதித் தூக்கத்தில் நினைவுக்கு வருவது போல, அவனுக்குத் தெரியாமல் இல்லை.

குழந்தைகளுக்குப் பிற்பகல் சாப்பாட்டிலிருந்தே ஒரு பகுதி வைத்துக் கொடுத்தனுப்பி விட்டதால், தனியாக சிற்றுண்டி எதுவும் செய்வதில்லை. நான்கு நாட்களுக்கு அப்புறம் கொறிப்பதற்கு வாய்ப்பாக ஏதாவது செய்வாள்; அவ்வளவுதான்.

"இந்தாருங்கள், இன்றைய டிபன்."

தலையணையிலிருந்து தலை நிமிராமல் ரகுவின் குரல் "என்னது?" என்று கேட்கும்.

"கடலை உருண்டை. உங்களுக்குப் பிடிக்குமே?"

அவன் எழுந்து உட்கார்ந்து கொள்வான். கோலி உருண்டைகளாகச் சிறுசிறு பந்துகள் தட்டில் தாளம் போடும். அவன் பார்வையைப் புரிந்து கொண்டவள் போல அவள் சொல்லிக் கொள்வாள்.

"ஆமாம். சின்னதாகத்தான் செய்தேன். அதற்கு மேலே கொடுத்தால் குழந்தைகளுக்கு உடம்புக்கு ஆகுமா?"

ரகு ஜன்னல்புறமாகப் பார்த்தபடி பெருமூச்சு விட்டுக் கொள்வான்.

குழந்தைகளுக்குப் பால் அளந்து வைத்து விட்டு அவள் பங்கு வரும்போது மீதம் இல்லாமலே போய்விடும். அவன் பங்கை மூடிவைத்திருப்பாள். படுக்கப் போகு முன் ரகு அவளைக் கூப்பிடுவான்.

"நீ சாப்பிடவில்லையே?"

"எனக்கு வேண்டாம். சாப்பாடே அதிகமாக இருந்தது."

"இதில் கொஞ்சம் சாப்பிடு."

மௌனம்.

"சொல்கிறேன் கேள். இப்போது என்ன ஆகிவிட்டது? இப்படியே நின்றுவிடுமா? குழந்தைகளுக்கு உன் பொறுப்பு, உன்னிடம் எனக்கு இருக்கும் பொறுப்பு எனக்குத் தெரியாதா? நான் முயன்றுகொண்டுதான் இருக்கிறேன். எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் கிளம்பிப் போய் விடுவேன்."

சட்டென்று அவன் மார்பில் கை வைப்பாள். அந்த வேதனையைத் தணிப்பது போல. விளக்கணைந்த பின்னும் கேட்காத ஒரு விசும்பல் அவன் மனத்துக்குக் கேட்டுக்கொண்டே இருக்கும். அந்தத் தீயை அணைக்கும் குளுமையை அவளிடம்தான் அவன் பெறமுடியும். அவளை ஒரு குழந்தையைப் போல் அணைத்துக்கொள்வான்.

அன்று அவன் சாப்பிடவில்லை. எழுந்திருக்கக்கூட முடியாமல் ஒரு உடல் சோம்பல். கண்ணை அசத்தும் அசதி. அவளிடம் கேட்

சமீபத்தில் தமது 52வது வயதில் இறைவனடி சேர்ந்த ஸ்ரீமதி சேதுபாய் அம்மையார். இவர் அகில இந்திய ரேடியோவில் நிர்வாக அதிகாரியாக பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள திரு கே. எஸ். சுப்ரமணியத்தின் மனைவி. வேஹுகானம் சரப சாஸ்திரிகள் வம்சத்தில் வந்த ஸ்ரீமதி சேதுபாய் அம்மையார் மைசூர் வாசுதேவாச்சாரியாரிடம் சங்கீதம் பயின்றவர். ரேடியோவில் வீணைக் கச்சேரிகள் செய்துவந்த இவர் சங்கீத உலகுக்கு நன்கு அறிமுகமானவர். அன்னாரின் ஆத்மா சாந்தி அடைவதாக.

# உங்கள் குழந்தையின் அழுகையை நிறுத்தி, சிரிக்கச் செய்ய,



## மானேர்ஸ் கிரைப் மிக்ஸ்சர் கொடுங்கள்.

அனுபவமிக்க அன்னையர் குழந்தையின் முதல் வயதில் ஏற்படும் சாதாரண உடற் கோளாறுகளைச் சரி செய்ய மானேர்ஸ் க்ரைப் மிக்ஸ்சரையே நம்புகின்றனர். ஒரு டீ ஸ்பூனளவு மானேர்ஸ் க்ரைப் மிக்ஸ்சர் ஒழுங்கான இடைவேளைகளுக்கிடையே தரப்படுவதால் குழந்தையின் மென்மையான ஜீரண சக்தி சீரான நிலையில் இருக்க முடிகிறது





- வயிற்று உப்புசத்தையும் காற்றையும் அகற்றுகிறது.
- அஜீரணத்தை—குறிப்பாக பல் முளைக்கும் பருவத்தில்—தடுக்கிறது.
- குடல் வலியையும், வயிற்று வலியையும் குணப்படுத்துகிறது.
- ஜீரணேந்திரியங்களைச் சமனப்படுத்தி, நித்திரையை அளிக்கிறது.

Geoffrey Manners & Company Limited

டாக்டரிடம் போய் மருந்து வாங்க ஆட்சேபணை சொல்லுவான் என்று அவளுக்குத் தெரியாமலே மருந்தை வாங்கிக்கொண்டு வந்தான் ரகு. அதை அவள் வாங்கிக் கொள்ளவில்லை.

''எனக்கு மருந்து தேவையில்லை....''

''ஏன்? என்ன உடம்பு உனக்கு?''

புருவங்கள் நெரிகையில், நெற்றிச் சுருக்கத்தில் திலகம் குழைந்தது. உதட்டோரம் குழிந்த புன்னகை அவன் அறியாமைக்கு இரங்குவது போல இருந்தது.

''ராஜி—''

குனிந்தபடி அவள் தலையை அசைத்துக் கொண்டாள். அவர்களுடைய பொறுப்பில் கூடுதலாக இன்னும் ஒன்று? சாருவுக்கு மூன்று வயது முடிந்து தொட்டில் பரண் ஏறிப் புழுதியும் கூடப் படிந்துபோன பின்—

அதுவும் அந்த வேளையிலா? பிறிதொரு சமயம் அதை அவர்கள் எந்த விதமாக ஏற்றிருப்பார்களோ?

''என்ன திகைப்பூண்டை மிதித்த மாதிரி அயர்ந்து நின்றுவிட்டீர்கள்?''

''ஒன்றுமில்லை. இது என்ன பிரமாதம்? இதற்காகவா நீ கலங்கிப் போகிறாய்?''

இதுபோன்ற சமயத்தில் ஒருவர் உணர்ச்சிகளை மற்றவர் கண்டுகொள்ள முடியாமல் மறைத்துக் கொள்வதில்தான் ஆறுதல்.

வேலைக்காரி முனியம்மாளிடம் ராஜி சம்பளம் கொடுக்கும்போது சொன்னாள்: ''வருகிற முதல் தேதியிலிருந்து வேறு வீடு பார்த்துக் கொள். முனியம்மா. எனக்கு ஆள் தேவையில்லை.''

''என்னம்மா இப்டீன்னு...''

''ஐயா வேறே வேலை பார்த்துக் கொண்டிருக்கிறார். அதுவரைக்கும் எனக்கும் சற்றுப் பண முடை...''

முனியம்மாள் தலையைக் குனிந்தபடி பாத்திரம் தேய்க்கப் போய்விட்டாள். அவள் கழுவி எடுத்து வைக்க வந்தபோது தண்ணீர் வாளியைக் கவிழ்த்து, தேய்த்துக் கழுவியபடி சொல்லிக் கொண்டாள்.

''நீ சம்பளம் அப்புறம் கொடுக்கலாம் தாயி. நான் வந்து போய்க்கிட்டிருக்கேன். இந்த உடம்புலே நீ வேலை செய்ய வாணாம்.''

''முனியம்மா!''

வெளியே மரங்கள் அசைந்தன. அவள் இன்னும் நேர் முகம் கொடுக்கவில்லை.

''சம்பளம் வாங்காமே நீ எப்படி...''

''உனக்கு இருக்கிறது எனக்கு இல்லியா தாயி?''

மாதக் கடைசி. கடைசியும் முதலும் இப்போது ஒன்றுதான். ஆனாலும் அந்த நினைப்பிலேயே ஏதோ ஒரு வறட்சி.

அன்று வெள்ளிக்கிழமை. காலையில் எழுந்து நீராடிவிட்டு, உலராத கூந்தலுடன் கோவிலுக்குப் போய்விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தாள். வாயில் முணுமுணுத்த நாமாவளியோடு நெஞ்சிலும் ஏதோ ஒரு முணு முணுப்பு. எப்போது இந்தக் கனம் விடியும்?








**'என் கணவர் ஒரு ஓவியர், பாடகர், எழுத்தாளர்...அவருக்குத் தெரியாத தொழிலே கிடையாது! ஆனால் வீட்டுச் செலவுக்கோ நான் டியூஷனிலே சம்பாதிப்பது மட்டும்தான்.'**

---

வாசல் தாண்டியதும் நின்றுகொண்டிருந்த அவன் உருவம் தெரிந்தது. அங்கையைப் பிரித்து நீட்டினான். விபூதியும் குங்குமமுமாகக் கலந்த பிரசாதம். அதை விரல் இடுக்கில் எடுக்கும்போது அங்கையைக் கிள்ளியது போன்ற குறுகுறுப்பு. அதை எடுத்து அவள் நெற்றியிலேயே இட்டான்.

''நீ என்ன வேண்டிக் கொண்டு வந்திருப்பாய் என்று எனக்குத் தெரியும். உன் பிரார்த்தனை பலித்துவிட்டது.''

அவள் விழிகள் வினயங்களாக வளைந்தன. வியப்பாக இதழ்க்கடையில் விரியத் தொடங்கிய புன்னகை சிறிது சிறிதாக மகிழ்ச்சியின் மலர்ச்சியில் சிரிப்பாகக் கொட்டியது. அவன் சிறு குழந்தையைப்போல விரலை உதட்டில் வைத்துக் கொண்டு கண்ணைச் சிமிட்டிக் கொண்டான். இடது கையில் அவள் பார்வை வீச்சின் வேகத்துடன் அலைந்த நீளக் கவர்.

''முதல் வாரத்துக்குள் அலகாபாத்தில் வேலையை ஒப்புக்கொள்ள வேண்டும்.''

சட்டென்று தலையில் தட்டியது போல இருந்தது. மகிழ்ச்சி புரையேறியது போலத் தோன்றியது. கண்ணெதிரே மின்னல் கிளை பிரிந்தது. மறுபடி அந்தத் தனிமையா? இதையா அவள் வேண்டிக் கொண்டாள்? இதற்காகவா ஏங்கினாள்? இப்படிக் கண்ணுக்குத் தெரியாத அருமையாக, எங்கேனும் ஒரு தொழிலில் இருந்தாவது, அவன் அவர்களுக்குப் பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்பதா அவள் இரண்டு மாதங்களாக இனம் புரியாமல் தவித்த தவிப்பு?

சாமான்களைக் கட்டியாகி விட்டது. எல்லாம் முடிந்து சுவர் ஓரம் அடுக்கி வைத்திருந்தவைகளை, ஒரு கண்ணோட்டம் விட்டபடி பார்த்துக் கொண்டிருந்தான் ரகு. விடியற்காலையில் அவன் கிளம்பிவிட வேண்டும். அதுவும் நல்லதுதான். விடிந்து வெளிச்சத்தில் பார்த்து விட்டால் சாரு அவனை விடமாட்டாள்.

''இதைப் பெட்டியில் வைத்துக் கொள்ளுங்கள். காலையில் கொடுக்க மறந்துவிடுவேன்'' என்று ஒரு காகிதப் பொட்டலத்தை எடுத்துக் கொண்டு வந்தாள் ராஜி. அதைப் பிரித்துப் பார்த்தான் அவன். அடுக்கி வைத்தாற்போல் பத்துப் பன்னிரண்டு கடலை உருண்டைகள். மனத்தில் என்னென்னவோ நினைவு அலைய வந்தது.

''உடம்பைப் பார்த்துக் கொள்ளுங்கள். மறுபடி அலைச்சல். கொஞ்ச நாட்களாக ஓய்வில் இருந்தது உடம்பு தேறி இருந்தது. அதற்குள் பொறுக்க மாட்டாமல் மறுபடியும் கிளம்பி விட்டீர்கள்.''

''ரொம்பச் சீக்கிரம் புறப்பட்டு விட்டேனா? நிஜமாகவா?''

அவள் முகத்தை நிமிர்த்தினான். அவள் என்ன சொல்லுவாள்? பிரிந்து அவன் வேலையின்றி இருந்ததைக் கண்டு, சொல்ல முடியாமல் பொருமிக் கொண்டிருந்தவளா இவள்? அவன் உழைப்பையும் அலைச்சலையும் எண்ணி ஆதங்கப் பட்டுக் கொண்டிருந்தது அவனுக்குத் தெரியும். அப்புறம் அவன் சோம்பி உட்கார்ந்து மௌனமாகப் புலம்பியதையும் அவன் அறிவான். இப்போது? இது என்ன நெஞ்சக் கிளர்ச்சி?

அவன் மார்பில் அவள் முகம் குழைந்தது. பஞ்சிலும் மிருதுவான கடலில் மூழ்கிப் போனது போல நினைவுகளிலிருந்து நழுன்று அந்த உணர்வு வெள்ளத்தில் மூழ்கியது போல அவள் அவனுடன் ஒன்றிப்போய் அசையாது நின்றுவிட்டாள். மாதங்களின் நினைவு நிமிஷமாகத் தோன்றி மறைகிறதா? அல்லது இந்த நிமிஷம்தான் மாதக் கணக்காக நீண்டு காத்துக் கொண்டிருந்ததா?

நிமிர்ந்த அவள் கண்கள் பளபளத்தன. விழத் துடிக்கும் இமை நீரைப் போல் உதடுகள் ஏதோ ஒரு புலம்பலில் எழுந்து அடங்கின.

''ராஜி! என்ன இது? பைத்தியம் மாதிரி? வீட்டுக்கு வரமுடியாமல் கடிதம் எழுதும்போது என்னிடம் கோபம். வந்து தங்கிவிட நேர்ந்து விட்டால் வேதனை. இப்போது புறப்படப்போகிறேன் என்றால் அங்கலாய்ப்பு. எனக்குப் புரியவேயில்லை ராஜி!''

அவனுக்கு எப்படி விளக்கிச் சொல்ல முடியும் அவளால்? அவன் அவள் கன்னங்களைக் கையினால் எட்டித் தொட்டான். விரல்கள் திடீரெனச் சில்லிட்டன....அப்போது அவனுக்கு ஏதோ புரிவது போல இருந்தது. கன்னத்தில் கண்ணீர் குளிரத் தலை நிமிர் கையில் அந்த எண்ணப் பரிமாறல் இருவருக்குமிடையே ஊமைச் சிரிப்புச் சிரிக்கிறது.

## தீபாவளிக்கு

தரம் வாய்ந்த பட்டு, கைத்தறி ஜவுளி ரகங்கள்

தேர்ந்தெடுக்க முந்துங்கள் :

# காஞ்சிபுரம் ஸில்க் ஹவுஸ்

(Authorised dealers of Government Silk Weaving Factory, Mysore)

பட்டு ஜவுளி வியாபாரம்

5/28-29, W.E.A., கரோல் பாக், புது டெல்லி-5 போன்: 563981

---

# தீப்தி

இல்லந்தோறும்
பிரபலமாகிவிட்ட
பெயர்

தி ஓரியண்டல் மெட்டல்
இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிட்.

கல்கத்தா - 12.



தீப்தி லாந்தர்கள்



காஸ் ஜனதா



எனாமல் சாமான்கள்

---

# கோபால் பல்பொடி



பல் வலி, பல் அரணை, வாய் நாற்றம்
பல்லில் இரத்தம் வடிதல், முதலிய
பல் வியாதிகளை குணப்படுத்தி
பல்களுக்கு வெண்மையும்
பலத்தையும் தருகிறது.




தயாரிப்பவர்கள்:— எஸ்.பி.எஸ்.ஜெயம் அன் கோ,
25, கீழ நாப்பாளையத் தெரு........மதுரை.

MINERVA



## அதுவும் அதிருஷ்ட எண்ணாச்சு!

சைப்ரஸ் தலைவர் ஆர்ச் பிஷப் மக்காரியோஸ் அவர்களுக்கு 13 ஓர் அதிருஷ்ட எண். இவர் பிறந்த தினம், பாதிரியார் ஆனது, ஜனாதிபதி ஆனது எல்லாமே 13ந் தேதி அன்றுதான். 13வது வயதில் கிரீஸ் நாட்டுக் குடிமகன் ஆனார் இவர். கிரீஸ் நாடு காமன்வெல்த்தின் 13வது நாடாகும்.

சிக்கிம் மன்னர் நம்கியால் '13' பற்றித் தமக்கு எவ்வித மூடநம்பிக்கையும் கிடையாது என்று காண்பிக்க தமது திருமணத்துக்கு 13 நாட்டுப் பிரதிநிதிகளை வரவழைத்தார். 13 லாமாக்கள் திருமணம் நடத்தி வைத்தனர். கார்களில் 13 கொடிகள் பறந்தன. அவர் தமது அரண்மனையில் 13 டெலிபோன்களைப் பொருத்தினார்.

தகவல்: மன்னன் :: ஆதாரம்: பெவில்

## பல்சுவைப் பக்கம் 1

### செக்கில் போட்ட கையெழுத்து!



ரேமாண்ட் மாஸ்ஸி என்ற பிரபல அமெரிக்க நடிகர் ஜனாதிபதி லிங்கனாகச் சில வருஷங்களுக்கு முன் நடித்து வந்தார். அப்போது ஒரு நாள் இரவு தியேட்டரை விட்டு அவர் வெளியே வந்தபோது பல இளைஞர்கள் அவரைச் சூழ்ந்து கையெழுத்து வேண்டினார்கள். ஒரு இளைஞன் கையெழுத்திடாத செக் ஒன்றை நடிகரிடம் நீட்டினான். அவரும் கையெழுத்துப் போட்டு விட்டார். பக்கத்தில் இருந்த நபர் இதைக் கண்டு பதற்றமுற்று இளைஞனைப் பிடித்துக் கொண்டார். அந்தச் செக்கைப் பிடுங்கிய போது அதில் காணப்பட்ட கையெழுத்து 'ஆப்ரஹாம் லிங்கன்'.

ஆதாரம்: 'காரனெட்'
தகவல்: ''ரமண்''

## வேதநாயகம் பிள்ளை அவர்களின் குட்டிக் கதை

ஒரு மசூதியில் மதபோதனை செய்வதற்காகத் துருக்கியப் பெரியாரை மக்கள் அழைத்தார்கள். அவர் மேடையை அணுகி, ''மகாஜனங்களே! நான் பேசப் போவது என்ன என்று தெரியுமா?'' என்றார். அவர்கள் ''தெரியாது'' என்றனர். பெரியவர், ''தெரியாதென்றால் உங்களுக்குச் சொல்லிப் பயனில்லை'' என்று கூறி மேடையை விட்டு இறங்கத் தயாரானார். உடனே ஜனங்கள் ''தெரியும், தெரியும்'' என்று கூவினார்கள். ''அப்படியா! சரி, தெரிந்தவர்களிடம் அதைப் பற்றி ஏன் பேச வேண்டும்?'' என்று சொல்லி அவர் இறங்கிப் போய்விட்டார். அவரையே பின்னும் ஒரு நாள் போதனைக்கு அழைத்தார்கள். மசூதியின் மேடையில் ஏறியவர் அதே பழைய கேள்வியைக் கேட்டார். குழுமியிருந்த ஜனங்கள் சாதுரியமாக, ''ஐயா, சிலருக்குத் தெரியும்; சிலருக்குத் தெரியாது'' என்று பதிலளித்தனர்.



பெரியவரா சளைத்தவர்? அவர் சொன்னார்: ''அப்படியானால் சரி. தெரிந்தவர்கள் தெரியாதவர்களுக்குச் சொல்லி விடுங்களேன்!'' என்று.

— எஸ். கங்கா

# நெதர்லாந்தா? ஹாலந்தா?

சிறிய நாடுகள் அவை அறியாமலே பெரிய குழப்பத்தை உண்டாக்க முடியும். அவற்றில் நெதர்லாந்தும் ஒன்று. தன் பெயரைக் குறித்தே குழப்பமுண்டாக்கியுள்ள நாடு இது. தாழ்வான நிலம் என்ற முறையில் நெதர்லாந்து என்று அழைக்கப்படுகிறது. ஹாலந்து என்பது ஒரு மாநிலத்தின் பெயரே அன்றி, நாட்டின் பெயர் அல்ல. முன்பு நெதர்லாந்தின் முக்கியமான மாநிலம் ஹாலந்து என வழங்கி வந்தது. மொத்த வரியில் ஐம்பத்தெட்டு சதவிகிதத்தை இம் மாநிலம் செலுத்தி வந்தது. நெதர்லாந்து நாட்டின் உற்பத்திப் பண்டங்களை ஏற்றிக் கொண்டு புறப்பட்ட கப்பல்கள், ஹாலந்து மாநிலத்திலிருந்தே புறப்பட்டன. எனவே மாலுமிகளும், கப்பல் தலைவர்களும், வெளிநாடுகளில் தம் சொந்த மாநிலமான ஹாலந்தின் பெருமையைப் பேசி வந்தார்கள். இது காரணமாக, மாநிலத்தின் பெயரே நாட்டுக்கும் வழங்கப்பட்டு விட்டது. (இது போலவே ஈரான் நாடு, பெர்சியா என்று அழைக்கப்படுகிறது. ஈரான் மன்னர், பார்ஸ் மாநிலத்தைச் சேர்ந்தவராதலால் நாட்டுக்கே அவரது மாநிலப் பெயர் சூட்டப்பட்டு விட்டது.)

நெதர்லாந்து மக்களை டச்சு என்று ஏன் அழைக்கிறார்கள்? நெதர்லாந்தில் பன்னெடுங் காலத்துக்கு முன்னர் வாழ்ந்து வந்த மக்கள், தங்களை "டூட்ஸ்" என்று அழைத்துக் கொண்டார்கள். டூட்ஸ் என்றால் மக்கள் என்று பொருள். இதுவே டச்சு என்றாகிவிட்டது.

# காதலிக்கப் பெண் மான் தேவை



மேற்கு பெர்லின் நகரத்துக்கு அருகேயுள்ள காட்டிலிருந்து புதுவிதமான சத்தம் கிளம்பும்போது மக்கள் வியப்புடன் கேட்டனர். பெர்லின் விலங்குக் காட்சிச்சாலையில் இருக்கிற மான் இவ்விதம் சத்தம் கிளப்புகிறது. அவ்வப்போது தன் பலத்தைக் காட்டுவதற்குச் சண்டை போடச் சகமான்கள் தேவை என்று அது சொல்லுகிறது. இதற்காக அந்த மான் அடிக்கடி வேலியிலும் மரத்திலும் மோதிக் கொள்கிறது. அத்துடன் அது அன்பைச் சொரிந்து காதலிக்க ஒரு பெண் மான் வேண்டும் என்றும் அந்தச் சத்தம் மூலம் தெரிவிக்கிறது. மேற்கு பெர்லின் விலங்குக் காட்சிச்சாலையில் இதுபோல் பல அருமையான விலங்குகள் இருக்கின்றன.

— யூ. பி. எஸ்.



# தாம்பத்திய ரிக்கார்டு!



ஜனத் தொகையைக் கட்டுப்படுத்தப் பெண்களின் திருமண வயதை உயர்த்தப் போவதாகச் செய்திகள் வருகின்றன. ஆனால் இதற்கு நேர்மாறான ஒரு விசேஷச் செய்தியைப் பாருங்கள்:

"உலகிலேயே மிக நீண்ட தாம்பத்திய வாழ்க்கை நடத்தி 'உலக ரிக்கார்டு' ஏற்படுத்தியுள்ளவர் சர் டெமுல்ஜி பிகாஜி நாரிமன் என்ற இந்தியர்! இவர் 86 ஆண்டுகள் தம் மனைவியோடு தாம்பத்திய வாழ்வு வாழ்ந்தார். இவர் 1940ல் காலமானார். அப்போது இவருக்கு வயது 91. திருமணத்தின்போது இவருக்கும் இவரது மனைவிக்கும் வயது ஐந்துதான்! தாம்பத்திய வாழ்க்கையில் இது உலக ரிக்கார்டு!

ஆதாரம்: 'டிட்பிட்ஸ்' தகவல்: 'விமெஸ்கே'

'குழந்தே.... குழந்தே...."

தன் தோழிகளுடன் பாண்டி விளையாடிக் கொண்டிருந்த பத்து வயதுச் சிறுமி, நொண்டிய கால் தரையில் படாமல் நின்றபடி தலையைத் தூக்கிப் பார்த்தாள். செழுமையான உடலும், கதுப்பான கன்னமும், கள்ளமற்ற கண்ணும் சிறுமியை வயதுக்கதிகமான வளர்த்தியாகக் காட்டின. தன்னைக் கூப்பிட்டவரை யார் என்று பார்த்தாள்.

''குழந்தே, இதுதானே, கோபாலசர்மா விடு.....?''

'ஆமாம்' என்று சொல்வதற்கு அடையாளமாகக் குழந்தையின் காது ஜிமிக்கி ஆடிற்று.

''உன்னே போய்ச் சொல்லேன்....''

'என்ன சொல்வது?' என்ற குழப்பத்தைச் சிறுமியின் கண்கள் தெரிவித்தன.

''வீட்டிலே சமையலுக்கு ஆள்...''

வந்தவளின் பேச்சு முடிவதற்குள்ளேயே சிறுமி பாய்ந்தோடினாள் உள்ளே. ''அம்மா, அம்மா....!'' என்ற குரல் வெண்கல நாதமாக வாசலில் கேட்டது. அவளுடைய தோழிகள், நடுவில் வந்து தங்கள் விளையாட்டைக் கலைத்த நபரைப் பல பாவங்கள் முகத்தில் விகசிக்கப் பார்த்தனர்.

ஐம்பது வயதிருக்கும். இடுப்பில் செருகியிருந்த சாவிக்கொத்து 'கிணிங்கிணிங்' என்று சப்திக்க, மஞ்சள் பூசி மெருகு ஏறிய வதனமும் வைரத்தால் பிரகாசிக்க ஓர் அம்மாள் வெளியே வந்தாள். வாசலில் நிற்பவளைப் பார்த்தாள். அவள் பார்வை நிற்பவளின் அங்கமெலாம் பாய்ந்தவுடன், அவள் உள்ளத்தையும் தொட்டுப் பார்த்தது.

''நம்ம வசந்தராவ் சொன்னார். உங்க வீட்டுச் சமையலுக்கு ஆள் வேணும்னு சொல்லியிருந்தீங்களாம். அதான் நான் வந்திருக்கேன்.....''

''இம்.... அவ்வளவுதானா சொன்னார்... அவர் ?''

'இன்னும் என்ன சொன்னார்?' என்ற யோசனை வந்தவளுக்கு.

''நல்ல ஆளா, நம்பிக்கையானவங்களா அனுப்புன்னு சொன்னீங்களாம்....''

''இம்.... அப்புறம்...?''

''வீட்டோடேயே இருக்கணும். குழந்தை குட்டி அவா இவான்னு தொந்தரவு இருக்கப்படாதுன்னு சொன்னீங்களாம். நான் மட்டுந்தான்.... இல்லே எனக்கு ஒரு பெண்; மூணு வயதாகிறது.... என் தங்கை வீட்டில் கும்பகோணத்தில் இருக்கு. அதைத் தவிர எனக்கு ஒருத்தரும் இடையாது. தொந்தரவா யாரும் என்னைத் தேடிக்கிட்டு வர மாட்டாங்க....''

எஜமானியம்மாள் விசாலம் மெதுவாக வாசலில் இருந்த ஊஞ்சலில் உட்கார்ந்தாள். அது தானாகவே ஆடிற்று. சப்தமில்லாமல் கொஞ்ச நேரம் கழிந்தது.

''சரி, இந்த வீட்டில் நீ இருக்கலாம்.'' எஜமானியம்மாவின் வாயிலிருந்து முத்து உதிர்ந்தது.

''எனக்குக் கதியே வேறு யாரும் கிடையாது. அவரும் போய் மூன்று வருஷமாகப் போகிறது. ஏதோ நீங்க கொடுக்கிற சம்பளத்தை மாசா மாசம் என் பெண்ணுக்கு அனுப்பிச்சுட்டா, அந்தக் கவலையும் கிடையாது. நீங்க இடற வேலையைச் சந்தோஷமா செய்து கொண்டிருப்பேன்.''

''சரி.'' சற்றுப் பொறுத்துத்தான் எசமானியம்மாளின் வாய் திறந்தது.

''இந்த வீட்டிலே நாம், என் பெண் கோமதி, அவ அப்பா.... அவருக்கு உடம்பு நலமில்லே. அவரைத்தான் பார்த்துக் கொள்ள வேண்டும். அவருக்குப் பிடித்தமானதைக் கேட்ட போது செய்து கொடுக்கணும். ஆனால் கண்டதையும் செய்து கொடுத்து, அவர் நோயை அதிகமாக்கிடப்படாது. அந்த விஷயத்தில் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்....''

''புரிகிறது. உங்க மனசு கோணாமல் நான் பார்த்துக்கறேன்....'' என்றாள் வந்தவள்.

''சரி, சாப்பாடு, துணிமணி இலவசமாகக் கிடைக்கும். தவிர மாதம் முப்பது ரூபாய் சம்பளம்.''

''மிகவும் சந்தோஷம். அதுவே போதும்.''

''அவசரப்படாதே. மாதத்துக்கு இரண்டு நாள் உனக்கு ஓய்வு கொடுப்பேன். எங்கே வேண்டுமானாலும் போய் வரலாம். உனக்கு நோய் நொடி என்று வந்தால் நம்ம டாக்டரிடமே பார்த்துக் கொள்ளலாம். தீராத ஏதாவது கர்ம வியாதியாக வந்தால் இந்த வீட்டிலே அப்புறம் இடம் கிடையாது.''



எசமானியம்மாள் ஒவ்வொரு தடவை தன் பேச்சை முடித்ததும், எதிராளியின் உணர்வோட்டத்தைக் கவனித்தாள். தான் சொல்லிய திட்டங்களுக்கெல்லாம் எதிராளியின் உள்ளம் சளிப்படையவில்லை என்பதை அறிந்துகொண்ட பிறகே, மீண்டும் ஆரம்பித்தாள்.

''கடவுள் அந்தமாதிரி சோதனைகளைக் கொடுக்க மாட்டார் என்று நம்புகிறேன்...'' என்றாள் வந்த அம்மாள்.

''சரி. உள்ளே போ.''

எசமானியம்மாள் முன்னே போக, வந்தவள் தொடர்ந்தாள். வாசலில் கோமதியும் தோழிகளும் வாழ்வின் முதற் படியில் குதூகலமாக விளையாடினார்கள். வாழ்வின் நடுப் படியில் அவதிப்பட்ட சமையற்காரி விடிவை நோக்கி நம்பிக்கையுடன் உள்ளே போனாள். கோமதியுடன் தன் பெண் ரங்கமணியின் ஏக்க முகத்தை ஒப்பிட்டுப் பார்த்தது அந்தத் தாயுள்ளம்.

எசமானியம்மாள் மாடியேறித் தன் அறைக்கு வந்தாள். அறை வாசலிலேயே ஈஸிசேரில் சாய்ந்து, ஏதோ சம்ஸ்கிருத புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்த பெரியவர் சத்தம் கேட்டுப் பார்த்தார்.

''இவளை வசந்தராவ் அனுப்பியிருக்கிறார்.''

அந்தப் பெரியவரின் கண்ணாடிக் கண் அவளைப் பார்த்தது.



''உன்னுடைய பெயர் என்னம்மா?'' என்றார் பெரியவர்.

''மங்களம்.''

''இதுக்கு முன்னாலே எங்கேயாவது இருந்தாயா? இல்லே தொழிலுக்கே இப்போதான் வருகிறாயா?''

''இரண்டு வருஷம் கும்பகோணத்திலே ஒரு ஆபீஸர் வீட்டிலே இருந்தேன். அவர்களுக்கு மாற்றலாகி எங்கோ திருநெல்வேலிச் சீமைக்குப் போய் விட்டார்கள். அதனாலே....!''

''ரொம்ப சரி. எனக்கு உடம்பு சரியில்லே. எனக்குப் பிடித்ததா, வாய்க்கு ருசியாக் கொஞ்சம் செய்து கொடுக்கணும்.''

''எல்லாம் சொல்லியாச்சு. மங்களம், நீ உள்ளே போய் வேலையைக் கவனி'' என்ற எசமானியம்மாள் மற்றொரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள்.

மங்களம் மாடிப் படி வழியாகத் திரும்பினாள். பத்துப் படி இறங்கியிருப்பாள். அதற்குள் எசமானியம்மாளின் அழைப்புக் கேட்டது. திரும்பவும் மேலே ஏறி வந்தாள்.

''ராத்திரிக்கு ஒரு தோசையலும் வத்தல் குழம்பும் போதும். இரண்டு அப்பளாம் கோமதிக்காகப் பொரிச்சுடு. உனக்குப் பலகாரமோ சாப்பாடோ வேண்டியதைத் தயாரித்துக் கொள். அதிகமா உறைப்பு இருக்கக் கூடாது.''

''சரி. அம்மா!''

மங்களம் கீழே இறங்கி வந்தாள். நேராகச் சமையற்கட்டுக்குப் போனாள்.

சமையல் அறையா அது? மூலைக்கொரு பாத்திரமும் அலம்பாத இரும்பு அடுப்புக்களும், சாம்பாரும், சோற்றுப் பருக்கையும் எங்கும் இறைந்து கிடந்தன. மங்களம் தன் பையை ஓர் அறையில் மாட்டினாள். குழாயைத் திறந்து இரண்டு வாளிகளில் தண்ணீரை நிரப்பிக் கொண்டாள். எல்லாப் பாத்திரங்களையும் எடுத்துப் போட்டுக் கொண்டு தேய்த்தாள். சாம்பல் போக, ஸ்டவ், அடுப்புஎல்லாவற்றையும் துடைத்தாள். அலமாரியில் இருந்த பாட்டில்கள், அலுமினிய டப்பிகள் எல்லாவற்றையும் துடைத்துச் சரியாக அழகாக அடுக்கி வைத்தாள். சமையல் அறையைத் துப்புரவாகச் செய்த பிறகுதான் அவளுக்கு அடுப்பு மூட்ட மனசு வந்தது. ஒரு பக்கத்தில் இருந்த சுவாமி அலமாரியைத் திறக்காமல், பக்கத்தில் தொங்கிய தூண்டா விளக்கைத் துடைத்து சுவாமி விளக்கேற்றினாள்.

''அம்மா....!''

கோமதி வாசலில் விளையாட்டை முடித்து விட்டு உள்ளே வந்தாள்.

''வா, அம்மா காப்பி தர்றேன், சாப்பிடு'' என்று அன்பாக அழைத்தாள் மங்களம்.

''ரொம்ப 'நீட்டா' இருக்கே, இங்கே இப்போது. அந்த மாமா இருக்கறப்போ இங்கே வந்தாலே அய்யே!''

''உக்காரு, குழந்தே!'' என்ற மங்களம், கடச்கட மணக்க மணக்கக் காப்பி கொண்டு வந்து கொடுத்தாள். கோமதி அந்தக்காப்பியை வாங்கிக் குடித்தாள். அவள் அதை ரசித்துக் குடிப்பதைப் பார்த்த மங்களம் சந்தோஷப்பட்டாள்.

''காப்பி ஏ ஒன்!'' என்றாள் கோமதி, காப்பி சாப்பிட்ட வாயைக் கவுன் தலைப்பால்அழுத்தித் துடைத்தபடி.

''அம்மா, கோமதி, நீ சமர்த்து இல்லேயா? கவுனை இழுத்துத் துடைத்துக் கொள்ளலாமா? கறை பட்டால் போகுமா?''

''எனக்கு நிறைய கவுன் இருக்கே....உங்களுக்குத் தெரியாது?'' என்று கேட்டாள் கோமதி.

ஒரு நிமிஷம் அவள் உள்ளக் கண்ணில் இரண்டே சட்டையுடன் அவள் தங்கை வீட்டில் புரளும் ரங்கமணி தோன்றி மறைந்தாள். மங்களத்தின் நெஞ்சு இலேசாக வலித்தது. 'இந்தக் குழந்தையை அன்புடன், அரவணைப்புடன் சிரிக்கச் சிரிக்கப் பேசி மகிழும் நிலையில் வைத்துக் கொண்டால் ரங்கமணியும் தானே சந்தோஷமாக வளர்வாள். கடவுள் காப்பாற்றுவார்' என்ற எண்ணமும் தோன்றியது.

இரவு எட்டு மணியிருக்கும். மாடியிலிருந்து அழைப்பு வந்தது. மங்களம் மாடிக்கு விரைந்தாள். ''இவருக்கு மட்டும் சாப்பாட்டை இங்கே கொண்டு வந்து விடுங்கள். நாங்கள் அங்கேயே வருகிறோம்'' என்றாள் வீட்டு எசமானி.

''அம்மா, உன்னைப் பற்றிக் கோமதி ரொம்பச் சொல்லிறாளே. அதுக்குள்ளே அவள் உன்னிடம் ஒட்டிக் கொண்டு விட்டாள். ஆச்சரியமா இருக்கு....!'' என்றார் பெரியவர்.

மங்களம் பதில் கூறாமல், மகிழ்ச்சியுடன் கோமதியைப் பார்த்தாள். பால் வடியும் முகம் அவளைக் கனிவாகப் பார்த்தது.

''எட்டு மணிக்கெல்லாம் அவர் கரெக்டா சாப்பிடணும். இம்.... போ....'' என்றாள் எசமானி.

மங்களம் இறங்கிப் போனாள். ஒரு சில நிமிஷங்களில் எவர்சில்வர் செட்டில் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு வந்தாள்.

பெரியவருக்கு வீட்டு எசமானியே எல்லாம் போட்டாள். அவர் குற்றம் குறை ஒன்றும் சொல்லாமல் சாப்பிட்டார். எசமானிக்கே அது ஆச்சரியமாக இருந்தது. அடிக்கடி மங்களத்தைப் பார்த்தாள். அவர் சாப்பிட்டு முடித்ததும், ''வா, கோமதி. கீழே போகலாம்'' என்றபடி எசமானியம்மாள் இறங்கினாள்.

மங்களம் அவர்களுக்குப் பரிமாறினாள்.

''இன்னும் கொஞ்சம் குழம்பு...'' என்று கேட்டாள் கோமதி. மங்களம் எடுத்துக் கொண்டு வந்தாள்.

''குழம்பு அதிகமா சாப்பிடக் கூடாது. உறைப்பு உடம்புக்குக் கெடுதல். வேண்டாம்'' என்றாள் தாயார்க்காரி.

ஆனால் கோமதியோ, ''நன்னா இருக்கு, அம்மா இன்னிக்கு. எனக்கு இன்னும் கொஞ்சம் வேணும். நீ போ.....'' என்றாள்.

''குழந்தை கேட்கிறது, ராத்திரியிலே. கொஞ்சமா விடறேன்'' என்று கூறிக் கொண்டே மங்களம் கொஞ்சம் குழம்பை ஊற்றினாள்.

''இம்.....'' என்றபடி தாயார்க்காரி எழுந்தாள்.

சமையலறையைச் சுத்தம் செய்துவிட்டு எல்லாருக்கும் பாலைக் காய்ச்சிக் கொடுத்து விட்டு மங்களம் படுக்கும்போது இரவு மணி பத்து ஆகிவிட்டது.

மங்களம், அந்த வீட்டில் ஒவ்வொருவரிடமும் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை அறிந்து, நல்ல பெயர் வாங்கினாள். வீட்டு எசமானி சமையலறைப் பக்கமே வருவதில்லை. சமையலைப் பற்றியும் ஒன்றும் சொல்வதில்லை. கணவரும் பெண்ணும்தான் சொல்கிற 'பேஷ் பேஷ்' போதும். தானும் கூறினால் திமிர் வந்து விடும்' என்ற எண்ணம் எசமானி விசாலத்துக்கு.

கோமதி பள்ளிக்கூட நேரம், விளையாட்டு நேரம் போக மற்றச் சமயங்களில் எல்லாம் மங்களத்திடம்தான் வளைய வந்தாள். 'அம்மா, அம்மா' என்று அன்பாக அழைப்பாள். மங்களமும் அவளுக்குப் பிடித்ததைப் பண்ணித் தந்தாள். வீட்டில் சாமான்களுக்குக் குறைவில்லை. வாய்க்கு ருசியாகச் செய்து கொடுப்பதில் என்ன கஷ்டம்?

கோமதி புதுப் புது பட்சணங்களைச் சாப்பிடும் போது மங்களத்தின் உள்ளத்தில் ரங்கமணியின் முகமும் காட்சியளிக்கத் தவறுவதில்லை. 'இந்த வயிற்றுப்பாட்டுக்காக, மூன்று வயதுக் குழந்தையைத் தங்கை வீட்டில் விட்டு விட்டு இப்படி வந்து உழைக்கும்படி யாகிறதே' என்ற ஏக்கமும் அவள் மூச்சில் கலந்து வெளி வரும். 'கோமதி வேறு, ரங்கமணி வேறு' என்று எண்ணவே கூடாது என்று தன்னை உறுதி செய்து கொண்டாள்.

ஒரு மாதம் முடிந்தது. எசமானியம்மாள் ''மங்களம், இந்தாம்மா, சம்பளம்'' என்று கூப்பிட்டுக் கொடுத்த விதமும் எவ்வளவோ மாறுதலை மங்களத்துக்கு உணர்த்திற்று. மங்களத்துக்கு அந்தப் பணத்தைவிட இந்த மாறுதல் மிகவும் திருப்தியாக இருந்தது.

''அம்மா, இந்தப் பணத்தை என் பெண்ணுக்காகக் கொண்டு கொடுத்துட்டு நாளைக் காலையிலேயே வந்து விடுகிறேன். ஒரே நாள் அவகாசம் வேண்டும்.....''

''சரி, சரி, போய் வா !'' என்றாள் எசமானி. அதற்கு மேல் பேசினால் அவள் தன் கஷ்டங்களைச் சொல்லத் தொடங்கி விடுவாளோ என்ற பயம் விசாலத்துக்கு.

மங்களம் கிளம்பும் போது கோமதியிடமும் சொல்லிக் கொண்டாள்.

''அப்போ இன்னிக்கு நீ இங்கே இருக்க மாட்டாயா? யாரைப் பார்க்கப் போறே ?'' என்று கேட்டாள் கோமதி.

''உன்னைப் போல எனக்கும் ஒரு பெண் இருக்கா. அவளைப் போய்ப் பார்த்துட்டு நாளைக் காலையிலேயே வந்துடறேன். நீ சமர்த்தா இரு கண்ணு'' என்று அவள் கன்னத்தைத் தடவி நெட்டி முறித்தாள்.

''என்னைப் போலயா? அப்போ இருங்கோ, இதோ வர்றேன்!'' என்று கூறி உள்ளே ஓடிய கோமதி, இரண்டு மூன்று சில்க் கவுன்களைக் கொண்டு வந்து, ''இதையும் கொண்டு கொடுங்கோ!'' என்றாள். கோமதியின் கபடமற்ற உள்ளம் மங்களத்தை இன்னும் நெருக்கப் பிணைத்தது. மங்களத்தின் கண்களில் நீர் திரண்டது.

''வேண்டாம், குழந்தே, நீ வெச்சுக்கோ. அப்புறமா.....''

இதைக் கவனித்த கோமதியின் தாயார் விசாலம், ''குழந்தை கொடுக்கிறதைத் தடுக்காதே. வாங்கிக்கோ!'' என்றாள்.

மங்களத்தால் மேலே பேச முடியவில்லை.

மங்களம் திரும்பி வந்ததும் அவளை முதலில் வரவேற்றது கோமதிதான். '' நீ

# ஸ்பென்ஸர் 'டீ' தான்
## சந்தேகமில்லை!

ஸ்பென்ஸர் 'டீ'யின் சுவையும், மணமும் தனிப்பட்டவை. தரத்தை விரும்புவோர் அனைவரும் கேட்டு வாங்குவது ஸ்பென்ஸர் தேயிலையைத்தான்.

ஸ்பென்ஸர் 'கிரீன்லேபல்' 'ரெட் பாண்ட்' மற்றும் 'பீகோ டஸ்ட்' ஆகியவை நீலகிரியின் உயர் மிகு சாரல்களில் பயிராகும் தேயிலை ரகங்கள்.



உங்கள் தேவைக்கேற்ப 100, 250 மற்றும் 500 கிராம் கார்டன்களில் கிடைக்கின்றன.

ஸ்பென்ஸர்
அண்டு கோ.,
லிமிடெட்
சென்னை மற்றும் கிளைகள்










# மேனி எழிலை அள்ளி அளிக்கும்

# மேட்டூர் சந்தன சோப்






மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை R.S. சேலம் ஜில்லா
மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:
சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்

Criterion-MC-1133

கொடுத்த சட்டையை எல்லாம் கொடுத்தேன், அம்மா. அவளுக்கு ரொம்பச் சந்தோஷம். நீ நன்னு இருக்கணும்'' என்றாள் மங்களம் பொங்கும் உள்ள மகிழ்வுடன்.

எசமானி விசாலமும் முன் போல் இல்லாமல் அடிக்கடி ரங்கமணியைப் பற்றி விசாரித்தாள். மாதா மாதம் அவள் போகும் போதும் அவள் குழந்தைக்குத் துணிமணிகள் வாங்கிக் கொடுத்தாள். வீட்டில் செய்த தின்பண்டங்களைக் கொண்டு போகுமாறு பணித்தாள்.

ஒரு நாள் மத்தியானம் சாப்பாட்டு நேரத்தில் விசாலம், ''ஏண்டி, பெண்ணைப் பெற்றிருக்கிறாயே! மாதா மாதம் பணத்தையும் தங்கைக்குக் கொடுத்துச் செலவிட்டுவிடுகிறாயே. கல்யாணம் கார்த்தி என்றால் ஏதாவது சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டாமா ? மாதம் பத்து ரூபாய் பிடித்து வைத்துக் கொள்ளட்டுமா? பிறகு சமயத்திலே சேர்த்துத் தர்றேன்'' என்று கேட்டாள்.

மங்களத்துக்கு எசமானி கேட்டது பொருத்தமாகத்தான் தோன்றியது. ஆனால் காலம் இருக்கிற நிலையில் இருபது ரூபாய்க்கு யார் சோறு போட்டுத் தன் பெண்ணைப் பார்த்துக் கொள்வார்கள்? அதுவும் இத்தனை நாட்கள் முப்பது கொடுத்துவிட்டு இப்பொழுது இருபது என்றால் எந்த மனைதான், ஏற்றுக் கொள்ளும் ?

''காலம் இருக்கிற நிலையிலே முப்பதுக்குக் குறைஞ்சு கொடுத்தா முடியுமா அம்மா ? ஏதோ அவர் போன போது, இருந்த சொத்தை யெல்லாம் அவர் தம்பிமார்கள் பங்கு போட்டுக் கொண்டதில், மிஞ்சி என் கைக்குக் கொஞ்சம் கிடைத்தது. அதைப் பாங்கியிலே போட்டு வைச்சிருக்கேன். அது தான் இருக்கிற பணம்...'' என்றாள் மங்களம்.

அவ்வளவுதான்! விசாலம் மறுபடி அதைப் பற்றிப் பேச வில்லை. முகத்தைக் கடுகடுப்பாக வைத்துக் கொண்டு சாப்பிட்டு எழுந்து போய் விட்டாள். 'இந்தச் சம்பளத்தில் பிடித்துக் கொள்ள வேண்டாம். மேலே சம்பளம் போட்டுக் கொடுத்து அதில் பிடித்துக் கொள்ளுங்கள்' என்று தான் கேட்டிருந்தால் எப்படியிருக்குமோ, அந்த மாதிரி பாவத்தைத்தான் விசாலத்தின் முகம் அப்போது காட்டியது என்பதை மங்களம் புரிந்து கொண்டாள்.

ஒரு நாள் இரவு சாப்பிட்டு விட்டுப் படுத்தார் கிழவர். அரை மணிக்கெல்லாம் மாடியில் சப்தம்கேட்டு எழுந்து போனாள் விசாலம். ''ஐயோ, இங்கே வந்து பாருங்களேன் '' என்ற கதறல் அடுத்த கணம் கேட்டது. மங்களம் விழுந்தடித்துக் கொண்டு மாடிக்கு ஓடினாள்.

பெரியவர் கட்டிலிலிருந்து தரையில் தலை குப்புற விழுந்திருந்தார். முகத்தில் எங்கோ அடிபட்டு இரத்தம் பொங்கி வழிந்து கொண்டிருந்தது. உடனே வேலையாள் ஓடினான் டாக்டரிடம். டாக்டர் வந்தார். என்னென்னவோ முயற்சிகள் செய்தார். விசாலத்தின் கெடுபிடியிலிருந்து அவருக்கு விடுதலைகொடுப்பது என்று இறைவன் திருவுள்ளம் இருக்கும் போது டாக்டர் என்ன செய்ய முடியும் ?



**ஆட்டுக்கு ஓநாய் காவல்!**

சின்னக் குட்டியாக இருந்தபோது நாய்களால் வளர்க்கப்பட்ட ஓநாய் ஒன்று ஆட்டு மந்தைக்குக் காவலிருந்து, ஆட்டு மந்தையைத் தாக்க வந்த வேறொரு ஓநாயைக் கொன்றிருக்கிறது! ''ஆட்டுக்கு ஓநாய் காவலா?'' என்ற பழமொழியைப் பொய்யாக்கும் இந்தச் செய்தியை மாஸ்கோவிலுள்ள 'டாஸ்' செய்தி ஸ்தாபனம் அறிவித்துள்ளது. —கே. ஆர்.கே.

கணவர் இறந்த பிறகு விசாலம் இன்னும் அதிகக் கண்டிப்புடனும் அதிகாரத்துடனும் நடந்து கொண்டாள். யாரைக் கண்டாலும், பேசினாலும் அவர்கள் செய்கையில், பேச்சில் என்ன குற்றங்கள் கண்டு பிடிக்கலாம், எப்படி மட்டந் தட்டலாம் என்ற யோசனை மிகுதியாகத் தெரிந்தது.

இத்தனைக்கத்தனை கோமதியின் போக்கில் பெரும் மாறுதல் ஏற்பட்டது. முன்னைவிட இப்போது அவள் மங்களத்திடம் அதிகமாக ஒட்டிக் கொண்டாள். சில சமயங்களில் தாயார் வேலையாட்களை அதட்டி மிரட்டும் போது, ''என்ன அம்மா, அப்படிப் பேசுகிறாய்?'' என்று கேட்பாள். விசாலம் கண்ணை உருட்டி விழித்து மகளைப் பார்ப்பாள். 'இதிலெல்லாம் நீ ஏன் தலையிடுகிறாய்?' என்ற கண்டிப்பு அதில் தொக்கியிருக்கும். அதற்கெல்லாம் கோமதி பயப்படுவதில்லை.

இந்த மாதிரி சமயங்களில் மங்களம், ''கோமதிக் கண்ணு, தாயார் வீட்டுக்குப் பெரியவர். அவர் நிர்வாகத்தில் நீ ஏன் தலையிடுகிறாய்? அது தப்பு!'' என்று கூறுவாள்.

''ஆமாம். உருட்டறதும், மிரட்டறதுமே வேலை. எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்காது'' என்பாள் கோமதி.

விசாலமும் தன் பெண்ணின் மாற்றத்தை உணர்ந்தாள். நல்ல இடமாகப் பார்த்துப் பெண்ணைக் கல்யாணம் செய்துவிட வேண்டும் என்று தீர்மானித்தாள். அதற்கான ஏற்பாடுகளிலும் முனைந்தாள். தன்னையொத்த அந்தஸ்துள்ள வைர டால் வீசும் பெண்களிடம் எல்லாம் சொல்லி வைத்தாள்.

இந்தச் சமயத்திலும் ஆண்டவன் விசாலத்தின் முயற்சிகளைத் தவிடு பொடியாக்கிவிட்டான். விசாலத்தின் பங்களாவுக்கு அடுத்தாற்போல் நான்கு பங்களா தள்ளி ஒரு வீட்டில் யுவன் ஒருவன் இருந்தான். படித்து விட்டுப் பாங்கியொன்றில் அக்கௌண்டெண்டாக இருந்தான் அவன். அவனுக்குத் தன் உள்ளத்திலே கோமதி இடம் தந்து விட்டாள்.

அம்மா எதிர்பார்க்கும் அளவுக்கு அது 'படே படே' இடமில்லையே என்பதுதான் கோமுவின் வருத்தம். அம்மாவுக்கு மேலாகத் தான் கருதிய மங்களத்திடமே முறையிட்டாள். ''அம்மாவிடம் கூற எனக்குப் பயமாயிருக்கிறது. நீங்கள் கூறி உதவி செய்ய முடியுமா?'' என்று கண்ணீருடன் கேட்டாள் கோமதி.

மங்களத்துக்குத் தன் சொந்தப் பெண் ரங்கமணி கதறுவதுபோல் தோன்றியது. ''கோமதி, கவலைப்படாதே. நான் ஏற்பாடு செய்கிறேன்'' என்று உறுதி அளித்தாள்.

மறுநாளிலிருந்து மங்களத்துக்கு இந்தச் சமாசாரத்தை விசாலத்திடம் எப்படி நாசூக்காகக் கூறுவது என்பதைப் பற்றியே யோசனையாயிருந்தது. பூகம்பம் ஏதாவது ஏற்படுமோ என்ற திகிலும் இடையிடையே ஏற்பட்டது.

ஒரு நாள் மாலை. கோமதி வெளியில் போயிருந்தாள். விசாலம் வாசல் ஊஞ்சலில் உட்கார்ந்து ஆடிக் கொண்டிருந்தாள். மங்களம் மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தாள். விசாலம் எல்லாவற்றையும் கேட்டாள்.

''நீ என்ன இதற்கு உடந்தையா ?''

''இல்லேம்மா. மன்னிக்கணும். குழந்தை கண் கலங்கறதை என்னாலே பார்க்க முடியலே. உங்ககிட்டே சொல்றேன்னேன். நீங்க தப்பா நினைக்கக் கூடாது. கோபித்துக் கொள்ளக் கூடாது. நிதானமா யோசனை செய்யுங்கள். உங்களிடம் நிறைய ஆஸ்தி இருக்கிறது. குழந்தைக்குப் பிடித்த கணவனை அமைஞ்சா அதுக்கும் சந்தோஷமா இருக்கும். அதனுடைய சந்தோஷம்தானே உங்களுக்கு! நீங்க நன்றாக யோசிக்கணும். அவசரப்பட்டுக் குழந்தை மேலே கோபிச்சு, அதைத் திட்டாதீர்கள்.....''

''இம்.... அப்புறம்.....?''

''எல்லாம் நீங்க பார்த்துச் செய்யறது. குழந்தை பாவம், உங்ககிட்டே பயம். குழந்தை, அது என்ன செய்யும்?'' என்று விசாலத்தின் இரும்பு மனத்தையே உருக்கும் விதத்தில், 'குழந்தை, குழந்தை' என்று வார்த்தைக்குவார்த்தை சொல்லிப் பேசினாள்.

''சரி, எல்லாம் அவள் வரட்டும். நீ போ'' என்றாள் விசாலம். அந்தக் குரல் பெரிய சூறாவளிக்கு அறிகுறி அல்ல; மந்தமாருதமாகத்தான் இருக்கும் என்று தோன்றியது மங்களத்துக்கு. உடனே உள்ளே போய்விட்டாள்.

இரவு எட்டு மணி இருக்கும். கோமதி மெதுவாக வாசற்படி ஏறி உள்ளே போனாள். வாசல் ஊஞ்சலிலேயே அசையாமல் மாலையிலிருந்து உட்கார்ந்திருந்த விசாலம், ''கோமதி!'' என்று அழைத்தாள்.

உள்ளே போகப் படியைத் தாண்டியவள் அப்படியே பின்னால் திரும்பிப் பார்த்தாள். என்றைக்கும் இல்லாத கனம் தாயின் குரலில் இழைந்ததை அறிந்தாள். விசாலம் கண் ஜாடையிலேயே 'அருகில் வா' என்று அழைத்தாள். தாய் அருகில் போய் நின்றாள்.

''உனக்கு என்ன, கண்ணனைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமா ?''

நேரிடையான கேள்வி ஒரு நிமிஷம் கோமதியைத் தடுமாறச் செய்தது. மங்களம் மாமி எல்லாவற்றையும் சொல்லி விட்டாளா? தாயாரின் மனப் போக்கைத் தெரிந்து கொள்ளாமல் எப்படிப் பதில் சொல்வது ? 'என்ன பதில் சொல்வது?' என்ற தயக்கம் ஒரு கணம். அடுத்த கணமே, 'விஷயம் தெரிந்து விட்டது. என்ன ஆனாலும் சரி' என்ற தைரியம் வந்து விட்டது.

'ஆமாம்' என்பதற்கு அறிகுறியாகத் தலையாட்டினாள் கோமதி.

''மங்களத்திடம் சொல்ல வாய் இருந்தது. இப்போ என்ன ஊமையாகி விட்டதா?''

மங்களத்துக்குச் 'சொரேல்' என்றது. தாய் ஸ்தானத்துக்குத் தான் போட்டியிட்டதாக அந்த அம்மாள் எண்ணிவிட்டாளோ? வைரம் பாய்ந்த அந்த நெஞ்சில் தன்னிடம் வைரியாக ஒரு பாவம் ஏற்படுமே!

எனினும் சமயத்துக்கு வந்து கைகொடுத்தாள் மங்களம். ''அம்மா தன்னை இதைவிட உயர்த்தியாகக் கொடுக்க நினைக்கும்போது இதை எப்படிச் சொல்வது என்று தயங்கியிருக்கிறாள் குழந்தை. உங்களுக்கு அதிருப்தியானால் அதைத் தன் காதாலே கேட்க வேண்டாமே என்றுதான் என்னைக் கேட்கச் சொல்லியிருக்கிறாள்'' என்றாள் மங்களம்.

தன்னைவிடத் தன் பெண்ணை அவள் அதிகம் புரிந்து கொண்டு அநுதாபம் காட்டுவது விசாலத்துக்குப் பிடிக்கவில்லை. தானும் கோமுவுக்கு அநுகூலம்தான் என்று நிரூபிக்க அவள் படபடத்தாள். ''சரி, நாளைக்கு அவர்களைப் பார்த்துப் பேசுகிறேன். அவர்களும் இஷ்டப்பட்டால் மேலே கவனிக்கலாம்'' என்றாள் விசாலம்.

கோமதி மகிழ்ச்சி பொங்க மங்களத்தைப் பார்த்தாள்.

விசாலம் இத்தனை லகுவில் சம்மதித்தது கோமதிக்கும் மங்களத்துக்கும் ஆச்சரியமாக இருந்தது.

திருமணம் நிச்சயமாயிற்று. ''மங்களம், கல்யாணம் முடிகிற வரையில் நீதான் எல்லாம்'' என்றாள் விசாலம்.

மங்களத்துக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. 'தன் பெண்ணுக்குக் கல்யாணம்' என்பது போல் அவள் உள்ளத்தில் ஒரே துள்ளல்.

திருமணத்துக்கு இன்னும் இருபது நாட்கள்தாம் இருந்தன. மங்களம்தான் எல்லா ஏற்பாடுகளையும் கவனித்துக் கொண்டாள். விசாலம் கேட்டபோதெல்லாம் பணம் எடுத்துக் கொடுத்தாள். 'யாவருமே பிரமிக்கும்படி கல்யாண ஏற்பாடுகள் இருக்க வேண்டும்' என்று விசாலம் எல்லாவற்றையும் நடத்தினாள். மங்களத்தின் கையில் காரியம் இருக்கிறது என்பதால் அவளுக்கு எல்லா ஊக்கமும் தந்து வேலை வாங்கினாள். இருந்தாலும் அவளது இதயத்தின் அடித்தளத்திலிருந்த விரோத பாவம் மங்களத்துக்குத் தெரியாமலில்லை.

மங்களத்துக்குத் திடீரென்று கும்பகோணத்திலிருந்து கடிதம் வந்தது, உடனே ஊருக்கு வரும்படி. வேறு ஒன்றும் தெளிவாக எழுதாமல் மொட்டையாக எழுதியிருக்கும் கடிதம் பல கவலைகளை அளித்தது.


பஜாஜ்
சிறந்த
ஒளிக்கு
வீட்டில்
ஆபீஸில்
ஆலைகளில்
தாங்கள் வெளிச்சத்தை பார்க்க முடியுமா? இல்லை. ஒளிபட்ட பொருட்களைத்தான் பார்க்க முடியும். நல்ல ஒளிதரும் திட்டத்தினால் தங்கள் வீடு அழகுடன் விளங்கும். ஆபீஸின் வேலைத்திறன் ஓங்கும்; ஆலைகளின் உற்பத்தி பெருகும். நல்ல ஒளித்திட்டத்திற்கு பஜாஜ் பல்புகள், ட்யூபுகள் மற்றும் இதர உபகரணங்கள் ஒப்பற்றவை.
ஒளி அமைப்பின் எல்லா தேவைகளுக்கும் பஜாஜையே நம்புங்கள்.
பஜாஜ் எலக்ட்ரிகல்ஸ் லிமிடெட்
45-47, வீர் நாரிமன் ரோடு, பம்பாய்-1 இந்தியா முழுவதிலும் கிளைகளுண்டு
heros'-BE-7 TAH



மழையில் சொட்டச் சொட்ட நனைந்து பள்ளியிலிருந்து திரும்பிய குழந்தை தாயிடம் கூறினான்: ''அம்மா நீ புதிதாய் கொடுத்த ரெயின் கோட்டை மழையில் நனையாமல் பத்திரமாப் பையில் எடுத்து வந்திருக்கேம்மா.''

- ஜெ. வி.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''இரண்டு மாசமாக வரவில்லையே என்பதால் எழுதியிருப்பார்கள். எல்லாம் கல்யாணம் முடிந்த பிறகு பார்த்துக் கொள்ளலாம். போய் வேலையைக் கவனி'' என்றாள் விசாலம்.

''இல்லேம்மா; என்னவோ மனசு கேக்க மாட்டேங்கிறது. மன்னிக்கணும். நான் போய்ப் பார்த்துட்டுத்தான் வரணும். ஒரு ராத்திரி போக அனுமதி கொடுங்கள்'' என்றாள் மங்களம்.

''போய்த்தான் ஆகணுமா ?''

''ஆமாம்.''

''சரி, நாளைக்குச் சாயந்திரம் மூன்று மணிக்குள் வந்துவிட வேண்டும். தவறினால் இந்த வீட்டிலே அப்புறம் வேலை கிடையாது'' என்று கூறிக் கொண்டே வாசல் ஊஞ்சலுக்குப் போய் விட்டாள் விசாலம். இவ்வளவு காலம் பழகியும் இத்தனை கடூராக அவள் பேசியது மங்களத்தின் நெஞ்சை அறுத்தது.

கோமதியிடமும் சொல்லிக் கொண்டு மங்களம் அவசர அவசரமாகக் கிளம்பினாள். அவளுக்கு என்னவோ அந்தக் கடிதத்தைப் பார்த்ததிலிருந்து மனத்தில் ஒரு பரபரப்பு, ஒரு தடுமாற்றம், ஒரு கிலி.

பொழுது விடிந்து நேரம் வளர்ந்து கொண்டிருந்தது. மங்களம் வரவேண்டிய கெடு நேரமும் கடந்து விட்டது. அவளைக் காணவில்லை. விசாலம் பொருமித் தீர்த்தாள். ''இவளை நம்பியா நான் ஏற்பாடு செய்கிறேன் ? வேலைக்காரப் புத்தியைக் காட்டி விட்டாள். இவள் இல்லாவிட்டால் என்ன? பணத்தை விசிறினால் பத்துப் பேர் வேலைக்கு வருவார்கள். இனி மேல் விரட்டும் சொல்கிறேன்....'' என்று தன் வீட்டுக்கு வரும் வேலைக்காரர்கள், பந்தல்காரர்கள், மேளக்காரர்கள், சமையல்காரர்கள் எல்லாரிடமும் ஒருபாட்டம் மங்களத்தைத் திட்டித் தீர்த்தாள்.

'இவ்வளவு தூரம் உதவி செய்த மங்களம் கல்யாண சமயத்தில் இப்படி மோசம் செய்கிறாளே' என்றுதான் கோமதியும் நினைத்து வருந்தினாள். ஆனால் காதலன், கல்யாணம் என்ற கற்பனையில் இந்த வருத்தம் அவளை அதிகம் பாதிக்கவில்லை.

மங்களம் வராமலே கோமதியின் திருமணம் வெகு அமர்க்களமாக நடந்து விட்டது.

'' 'சீப்பை ஒளித்தால் கல்யாணம் நின்று போய்விடும்' என்று அந்தச் சமையல்காரி நினைத்தாள். ஜாம் ஜாமென்று இதோ கல்யாணம் நடந்து முடிந்துவிட்டது'' என்று விசாலம் எல்லாரிடமும் கூறிப் பெருமைப் பட்டுக் கொண்டாள்.

கல்யாணச் சந்தடி குறைந்து நாலைந்து நாட்கள் ஆகியிருக்கும். விசாலம் மேல் மாடி அறையில் கணக்கு வழக்குகளைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கோமதி முன் பக்க ஹாலில் உட்கார்ந்து இன்பக் கனவுகளைக் கண்டு கொண்டிருந்தாள்.

வாசல் கேட் கிறீச்சிட்டு ஒலித்தது. கோமதி ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். மங்களம் வந்து கொண்டிருந்தாள். அதே சமயத்தில் மாடியிலிருந்து ''வேண்டிய சமயத்தில் விலகியிருந்துட்டு இப்போ எதுக்கு வரணுமாம்? இது தர்மசத்திரமா என்ன?'' என்ற குரல் கேட்டதும், மங்களம் தலையைத் தூக்கிப் பார்த்தாள். விசாலம் தான் மாடி வராந்தாவில் நின்று கர்ஜித்தாள்.

''என்னை மன்னிக்கணும், அம்மா. போன இடத்திலே....'' என்ற குரல் விசாலத்தின் உள்ளத்தில் பாய்ந்தது.

''போன இடத்திலே....'' மங்களத்துக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. சமாளித்துக் கொண்டு பேசினாள்:

''நான் மகா பாவி. என் பொண்ணு வைகுரியிலே போயிட்டா. அதனாலேதான் அம்மா நான் வர முடியலே....'' என்று மங்களம் சொன்னவுடன் விசாலத்துக்கும் மனம் இளகியது.

மங்களம் வீட்டுக்குள் அழைக்கப்பட்டாள். விசாலத்தின் எதிரில், கோமதியின் கையில் மங்களம் ஒரு சிறிய வெல்வெட் பெட்டியைத் தந்தாள். அதற்குள் ஒரு வைர மூக்குப் பொட்டு மினுமினுத்தது. மங்களம் சொன்னாள் : ''என் பெண் கல்யாணத்துக்காக ஏதோ கொஞ்சம் வைத்திருந்தேனே, அதிலே தான் இதை வாங்கினேன். பின்னை வீட்டுக்காரா கோமதிக்கு மூக்குக் குத்தணும்னு சொன்னதும், நீங்க தீபாவளிச் சீராக அதைப் போடறதா வாக்குத் தந்ததும் நினைவு வந்தது. எனக்கு இனிமே எதுக்குப் பணம்னு இதை வாங்கினேன்.''

அம்மாவின் உள்ளம் புரியாத கோமு அதை வாங்கிக் கொள்வதா கூடாதா என்று தயங்கினாள்.

''கோமு, மங்களம் உன் வாழ்க்கையிலே சகல சௌபாக்கியமும் வரத்துக்காக இந்த மங்களச் சின்னத்தைத் தன் துக்கத்திலே இருந்தே இழைச்சுப் பண்ணியிருக்கா....'' என்று சொல்லியபடி கோமதியின் குத்தாத மூக்கில் அந்த மூக்குத்தியை வைத்துப் பார்த்ததுமே விசாலத்தின் கண்களிலிருந்து நீர் வழிந்தது. வைர முத்துக்களைவிட அந்தக் கண்ணீர் முத்துக்கள் மங்களத்துக்கு அதிக ஆறுதலைத் தந்தன. வைரி மனத்தையும் மாற்றிவிட்ட அவளுடைய வைர மனமும் கோமதியின் மங்கல அழகில் மகிழ்ந்தது.

# அறத்தால் வருவதே இன்பம்

*All India Colloquium on Ethical and Spiritual Values as the basis of National Integration*

அரசியல் வாழ்க்கையிலும், ஆன்ம வாழ்க்கையிலும் நமது நாடு இப்பொழுது ஓர் இக்கட்டான நிலைமையில் உள்ளதை யாவரும் அறிவர். தொன்றுதொட்டு இந்நாட்டு மக்கள், அறத்துக்கும் அரசாங்கத்துக்கும், தெய்வத்துக்கும், குருவுக்கும், பெரியோருக்கும் அளித்து வந்த மதிப்பும் மரியாதையும் குன்றி விட்டன. இந்திய சமுதாயம் மீண்டும் தலைதூக்கி நிற்பதற்கு 'அறத்தால் வருவதே இன்பம்' எனும் உண்மையில் நம்பிக்கையைத் தளர விடாமல் பாதுகாக்க வேண்டும். பொது வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் நேர்மையையும் நீதி நெறியையும் கடைப் பிடிப்பதாலும், தனி மனிதனுடைய வாழ்க்கையில் ஆத்ம குணங்களைப் போற்றி வளர்ப்பதாலுமே நாடு முன்னேற இயலும். முன்னேற்றத்துக்கு வேறு குறுக்கு வழியில்லை. இந்த அடிப்படையான கருத்தை வற்புறுத்தி மக்களை விழிப்புறச் செய்து நாட்டின் ஒற்றுமையை வளர்ப்பதற்காக நீண்ட காலம் அரிய சேவை செய்து மக்களின் பெருமதிப்பைப் பெற்றுள்ள தலைவர்கள் பலர் பம்பாய் நகரத்தில் பாரதீய வித்யா பவனத்தில் 30–12–66 முதல் 2–1–67 வரை கூடி ஆலோசித்தனர். கூட்டத்துக்கு முன்னேற்பாடுகளைச் செய்து அழைப்பு அனுப்பியவர்கள் பாரதீய வித்யா பவனச்சார்பில் ஸ்ரீ கே. எம். முன்ஷியும், காந்திஸ்மாரக நிதிச் சார்பில் ஸ்ரீ ஆர். ஆர். திவாகரும், ஸ்ரீராமகிருஷ்ண சங்கக் கலா நிலையச் சார்பில் ஸ்ரீமத் ஸ்வாமி ரங்கநாதானந்தரும் ஆவர்.

நாடு சுதந்திரமடைந்த பின்பு நம்மை நாமே சோதித்துக் கொள்வதற்கும் முன்னேற்றத்துக்குள்ள தடைகளை நீக்குவதற்கும் முதன் முதலாகச் செய்த பெருமுயற்சியாக இது விளங்குகிறது. பல நூற்றாண்டுகளாக வளர்ந்து வலிமை பெற்ற ஒரு சீரிய பண்பு நம்மைப் பல இன்னல்களிலிருந்து இதுவரை காத்து வந்திருக்கிறது. அப்பண்புக்குக் கேடு வராமல் காக்க வேண்டியது நமது கடமையாகும். சென்ற சில ஆண்டுகளாக நாம் அதைப் புறக்கணித்து வந்திருப்பதால் பல தீமைகள் தோன்றியிருக்கின்றன; சமூகத்தில் பிளவுகள் அதிகரித்து வருகின்றன. அரசாங்கப் பிளவுகள் இருந்த முன்னாட்களில் கூட ஸ்ரீ சங்கராசாரியார் போன்றவர்கள் பாரத தேசம் முழுதும் சஞ்சாரம் செய்து பண்டையப் பண்பைப் பரப்புவதில் தடையிருக்கவில்லை. நாம் சுதந்திரம் பெற்றபின் அம்மாதிரிப் பணிக்குத் தடைகள் அதிகரித்து விட்டன. அரசியல் பதவிகளைப் பகிர்ந்து கொள்வதிலும், அறவழியைக் கருதாது பொருளையும் இன்பத்தையும் நாடுவதிலும் நாம் லட்சியத்தை இழந்து விட்டவர்களாகக் காண்கிறோம். நவீன விஞ்ஞானத்தின் வளர்ச்சியில் ஏற்பட்டுள்ள கருவம், ஆத்ம ஞானத்தையும் அறவாழ்வையும் அழித்துவிடப் பார்க்கிறது. நமது பண்டைய பண்பிற்கு அபாயம் பல வகையில் வளர்ந்து வருகிறது. ஆடவர் பெண்டிர் உறவில் மதிமயக்கம், குடும்ப ஒற்றுமையில் தளர்ச்சி, பெற்றோர், ஆசிரியர், மதபோதகர் ஆகியோரின் செல்வாக்கு குறைவது, சினிமா நவீனக் கதை நூல்கள் முதலியவற்றின் கவர்ச்சி ஆகியவை இவ்வபாயத்தின் அறிகுறிகள். காட்டுத் தீபோல் பரவும் இப்போக்கின் வேகத்தை அடக்காவிட்டால் பல நூற்றாண்டுகளாகப் பயிர் செய்து வளர்த்த நந்தவனம் போன்ற இச்சமூகம் பாழாகிவிடும். பழமையிலிருந்து புதுமைக்கு மாறிக் கொண்டிருக்கும் இந்நிலையில் நாம் தெய்வீக வாழ்க்கையையும், சமூக ஒற்றுமையையும், சகிப்புத் தன்மையையும், ஸம தரிசனத்தையும் போற்றி வளர்க்க வேண்டும். இதைச் சாதிக்கக் கல்வி முறைச் சீர்திருத்தம் முதல்படியாகும். மாணவர்கள் என்ன படிக்கிறார்கள் என்பது அவ்வளவு முக்கியமன்று, எப்படி நடக்கிறார்கள் என்பதுதான் முக்கியம். இப்போதைய கல்வி முறையில் பலபொருள்களைப் பற்றியவிரிவான அறிவு வளர்க்கப்படுகிறது; ஆனால் தன்னடக்கம், ஆன்ம உணர்ச்சி, நன்னடத்தை, தியாகம், சேவையில் ஆர்வம் முதலிய லட்சியங்கள் கவனிக்கப்படுவதில்லை. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகானந்த ஸ்வாமிகள், யோகி அரவிந்தர், ரமண மகரிஷி, இராமலிங்க சுவாமிகள், காந்தியடிகள் போன்றவர்களின் வாழ்க்கையாலும் உபதேசங்களாலும் வாலிபர்கள் பயனடையக் கல்வித் திட்டத்தில் இடம் காணவில்லை. இதன் பயனாகக் கலாசாலைகளிலிருந்து வெளிவரும் வாலிபர்கள் தெய்வ நம்பிக்கையற்றவர்களாகவும், பொதுநலத்தில் அக்கறையில்லாதவர்களாகவும், சுயநலப் பற்று மிகுந்தவர்களாகவும், வாழ்க்கையில் உயர்ந்த குறிக்கோள் ஏதுமில்லாதவர்களாகவும் காணப்படுகின்றனர். இக்குறையை நீக்குவதற்குக் கல்வி சீர்திருத்துவதுடன் பொதுவாக மக்களின் மனத்தைப் பெரிதும் கவரும் திரைப்படங்களும், ஒலிபரப்புச் சாதனங்களும், பத்திரிகைகளும் ஒத்துழைக்கும்படி செய்ய வழி காண வேண்டும்.

பாரதீய வித்யாபவனத்தில் சொல்லரங்கு நிகழ்ந்த நான்கு நாட்களிலும் அறிவிலும் அநுபவத்திலும் முதிர்ந்தவர்கள் பல துறைகளைப் பற்றித் துருவித் துருவி ஆராய்ந்து உருவாக்கிய ஆலோசனைகளே நூலாக வெளிவந்துள்ளது. யோசனைகளை உருவாக்கியதோடு மட்டுமின்றி, அவைகளைச் செயல் முறையில் கொண்டு வருவதற்காக நிரந்தரமான குழுக்களையும் நிறுவியிருக்கிறார்கள். அனைவரும் இதனை வரவேற்பார்கள்.

**அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்**
**புறத்த புகழும் இல.** — ''அண்ணு''

*[வெளியீடு: பாரதீய வித்யாபவன், சௌபாத்தி ரோடு, பம்பாய்-7; விலை ரூ. 15]*




- ★ சாஸ்திரிக்கு நூற்றாண்டு
- ★ முன்னுதவி நல்குக!
- ★ மார்கழி வரப்போகுது!
- ★ பிடிக்காதவருக்குப் பிடித்தது
- ★ காப்பியமும் எரிச்சலும்!
- ★ 'ஸாரி'க்கு 'வெரி ஸாரி'!

காலஞ்சென்ற மகாகனம் வி. எஸ். சீனிவாச சாஸ்திரிக்குத் தக்க முறையில் நினைவுச் சின்னம் ஏற்படுத்த முன்வருமாறு சர்க்காரையும் பொதுமக்களையும், குறிப்பாக எல்லாக் கல்வி ஸ்தாபனங்களின் தலைவர்களையும், கேட்டுக் கொள்ளுகிறேன். கனம் சாஸ்திரி நம் நாட்டில் எல்லாத் தரப்பினராலும் விசேஷமாக மதிக்கப்பட்டவர். வெளி நாடுகளில் ஓர் உயர்தர அரசியல் நிபுணராகவும் தத்துவ ஞானியாகவும், இந்தியக் கலாசாரத்தின் ஓர் உன்னத வடிவமாகவும் பெருமை பெற்றிருந்தார். காந்திஜியும், ஸ்ரீ சாஸ்திரியும் நெருங்கிய நண்பர்கள். ஆங்கில மொழியை அவர் கையாண்ட லாகவம் பிரசித்தம். அவர் கல்வித் துறையில் கொண்டிருந்த ஈடுபாடு இணையற்றது. இத்தகைய மேதைக்கு அவர் பெயரில் ஒவ்வொரு பள்ளியிலும் கல்லூரியிலும் ஆங்கில மொழி அறிவு வளர்ச்சிக்கான உபகாரச் சம்பளங்களும் பரிசுகளும் வழங்குவதைவிடச் சிறந்த ஞாபகச் சின்னம் எதுவுமில்லை. இதோடு கல்வி நிலையங்களில் கனம் சாஸ்திரியின் படத்தையும் வைப்பது பொருத்தமாகும். 1969 அக்டோபரில் நிகழ்கிற காந்திஜியின் நூற்றாண்டு விழாவோடு சேர்த்து கனம் சாஸ்திரியின் நூற்றாண்டு விழாவையும் கொண்டாடலாம். ஸ்ரீ சாஸ்திரியின் தோற்றம் 22–9–1869.

சென்னை–15 டி. எஸ். நாராயணஸ்வாமி

சமீப காலமாக அரசாங்கப் பதிவு பெறாத அரசு ஊழியர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் பண்டிகைக் கால முன் உதவிப் பணம் தமிழக அரசாங்கத்தால் அளிக்கப்பட்டு வருகிறது. ஆனால் இதுகாறும் மான்ய உதவி பெறும் ஆரம்ப உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்கு முன் உதவிப் பணம் அளிக்கப்படவில்லை. வரும் தீபாவளிப் பண்டிகையை முன்னிட்டு அவர்களுக்கு மேற்படி பண்டிகைக் கால முன் உதவிப் பணம் வழங்க ஆவன செய்யுமாறு தமிழக முதலமைச்சரையும், கல்வி அமைச்சரையும் ஆசிரியர்கள் சார்பில் வேண்டிக் கொள்கிறேன்.

தங்கவரம் ஆர். நாகராஜன்

சென்ற பதினைந்து ஆண்டுகளுக்கு அதிகமாகப் பள்ளிச் சிறுவர், சிறுமியருக்காகத் திருப்பாவை திருவெம்பாவை பாடல் போட்டியும் விழாக்களும் ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ ஆசாரிய சுவாமிகளின் ஆசியுடன் தமிழக அறநிலையப் பாதுகாப்பு இலாகாவின் ஒத்துழைப்போடு நடந்து வருகிறது.

வரப்போகும் மார்கழி மாதத்தில் அன்பர்கள் தங்களுக்குப் பக்கத்திலுள்ள கிராம, நகரத்துப் பள்ளிகளிலுள்ள குழந்தைகள் இந்தத் தெய்வீகப் பாடல்களை மனப்பாடம் செய்யவும், பாவைப் போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகள் பெறவும் முயற்சி எடுத்துக் கொண்டு தொண்டு புரிய வேணுமாய்க் கேட்டுக் கொள்ளுகிறோம்.

இத்தெய்வீகப் பணியில் திருக்கோயில்களின் அறங்காவலர்களும், நிர்வாக அதிகாரிகளும் முன்கூட்டியே ஈடுபட்டு சென்ற ஆண்டைவிடச் சிறப்பாக பாவை மாநாடுகள் நடத்திக் குழந்தைகளுக்குப் பரிசுகளும் வழங்க வேண்டுகிறோம்.

மாயூரம் திருப்பாவை திருவெம்பாவை
மத்திய குழுவினர்

'கல்கி'யில் வரும் சுதந்திரக் கட்சியின் கொள்கைகளில் அவ்வளவு பிடிப்பு எனக்கில்லாவிட்டாலும், 'பிரதமரும் தி.மு.க.வும்' என்ற உங்களது துணைத் தலையங்கம் படித்து வியப்படைந்தேன். பிரதமராது எந்தச் செயலையும் எதிர்ப்பதுதான் உங்கள் வேலை என நினைத்திருந்த நான் அவரிடத்து நல்ல செயல் காணப்பட்டால் அதனைப் பாராட்டத் தயங்க மாட்டீர்கள் என்ற உண்மையைப் புரிந்து கொண்டேன்.

மதுரை ராஜு

தங்கள் 8–10–67 இதழில் பிரசுரித்துள்ள 'காப்பிய'த்தின் பட்சணங்களைச் செய்வதென்றால் சர்க்கரை தேவையாக இருக்கிறது. ஆனால் தாங்கள் 73-ம் பக்கத்தில் வெளியிட்டுள்ள நகைச் சுவைக் குறிப்பின்படி நாங்கள் ஸ்பூன் சர்க்கரைக்காகக் 'க்யூ'வில் நிற்கத்தான் வேண்டும். ஏனையா, முந்திய பக்கத்தில் ஆசையைத் தூண்டிவிட்டுப் பிந்திய பக்கத்தில் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறீர்?

வெள்ளூர் பி. சி. நாதன்

(காப்பி பட்சணங்களை வெல்லத்தாலும் தயாரிக்கலாம் என்று கட்டுரையில் கண்டுள்ளதே!—ஆசிரியர்)

'மணக்கோல'த்தில் நாங்கள் பார்க்கும் சீதா எப்போதும் 'பிரிண்டட் ஸாரி'யிலேயே தோன்றுகிறாள். ஆனால் ஜானு சீதாவை வர்ணிப்பதோ அவள் கோடம்பாக்கம் புடவையும் உறையூர் புடவையும் உடுத்துவதாகத்தான்! கோடம்பாக்கம் புடவையிலும், உறையூர்ப் புடவையிலும் பூ போட்டு வந்திருக்கிறதா என்ன?

சென்னை – 17 என். ரங்கநாயகி

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.

உங்கள் கேசத்தை ஆரோக்கியமுடன் பளபளப்பாக வைத்திருப்பது

# பிரில்க்ரீம்

எண்ணெய்ப்
பற்றோ
கலைசலோ
இராது

## பிரில்க்ரீம் மட்டுமே

- அதிக எண்ணெய்ப்பற்று இல்லாமலும், தாறுமாறாக உரோமம் கலையாமலும் சேர்த்தியாக தலையை வார உங்களுக்கு உதவுகிறது.
- மிகவும் சிக்கனமானது-ஒருமுறை தடவி வாரிக் கொண்டால் நாள் முழுவதும் உங்கள் தலை கலையாது அழகாக தோற்றமளிக்கும்.
- உரோமம் உதிர்ந்து வழுக்கை விழாமல் தடுக்கக் கூடிய, ஆரோக்யமான உரோம வளர்ச்சியைத் தூண்டக்கூடிய, சேர்த்தியான கலவை வாய்ந்தது.

இனிமேல் பிரில்க்ரீமையே உபயோகியுங்கள்

கருமையோடு பளபளக்கும் ஆரோக்கியமான கேசத்திற்கே!




B-1-2-1-67-TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி